# BALAVACHAKAM

## FIFTH BOOK

(TAMIL)



VIDWAN

R. MEENAKSHISUNDARAM

*Lecturer in Tamil, St. Joseph's School, Trichinopoly*




APPROVED BY THE TEXT-BOOK COMMITTEE
(*Vide Gazette, dated 2nd May 1939, Page 208*)

(*Reprinted in 1939*)

MADRAS:
C. COOMARASAWMY NAIDU & SONS
1939

 [Price 6 As.

# பால வாசகம்

## (ஐந்தாம் வகுப்பு)

திருச்சிராப்பள்ளி செய்ன்ட் ஜோஸப்
கலாசாலைத் தமிழாசிரியர்
வித்துவான் - R. மீனாக்ஷிசுந்தரம்
எழுதியது




துரைத்தனத்தார் அங்கீகரித்தது
[2-5-'39 கெஜட் 208-ஆம் பக்கம் பார்க்க]
(*Reprinted in 1939*)

சென்னை :
ஸி. குமாரசாமி நாயுடு ஸன்ஸ்
1939

ரெஜிஸ்தர் செய்தது]　　　　[விலை 6 அணா

# பொருள் அடக்கம்



# பால வாசகம்

## ஐந்தாம் வகுப்பு

---

### 1. உழைப்பு

நாம் நாளுக்கு நாள் சிறந்து வாழ்வதற்கு முக்கியமானது உழைப்பேயாகும். நாம் எந்தக் காரியத்திலும் விடாமல் ஊக்கமாகப் பாடுபடுவதே உழைப்பாகும். கடவுள், எல்லா உயிர்ப் பிராணிகளுக்கும் உபயோகமாகும்படி நீர், நிலம் முதலியவற்றைப் படைத்திருக்கிருர். இவைகளைச் சரியாகப் பயன் படுத்திக்கொள்ளுவதற்குத் தக்கதாக அவயவங்களையும் கொடுத்திருக்கிருர். இதனுல் ஒவ்வொருவரும் உழைக்க வேண்டுமென்பது விளங்குகிறதல்லவா ?

உழைப்பில்லாவிடில் பயனுமில்லை. ஆதலால் தினமும் நாம் பாடுபட்டு உழைத்தால் தான் உண்ணலாம். நல்ல உடைகளை உடுக்க

லாம். நமது சுற்றத்தார்களுக்கும் கொடுத்துத வலாம். யாசிப்பவர்க்கும் இல்லையென்னுமல் கொடுக்கலாம். உழைப்பில்லாவிடில் உண்பதற்கும், உடுப்பதற்கும் வழியின்றி வருந்தவேண்டும். இவ்வாறு உழைக்காதவன் தானும் வீணே துன்புறுகிறான். பிறருக்கும் ஒரு சுமையாகிறான். தாய்தந்தையர் முதலியவர்களும் அவனை வெறுப்பார்கள். ஆதலால் ஒவ்வொருவரும் ஏதேனும் ஒரு தொழிலைச் செய்யவேண்டும். பாடுபட்டால் பலனுண்டு என்பது ஒரு பழமொழியல்லவா ?

உலகத்தில் பல விதமான தொழில்கள் இருக்கின்றன. பயிர்த் தொழில், நெசவுத் தொழில், தச்சுத்தொழில், சிற்பத்தொழில் முதலிய கைத்தொழில்கள், வாணிபம் முதலிய பலவுண்டு. அவரவர்களது தரத்துக்குத் தக்கபடி ஏதாகிலும் ஒரு தொழிலைச் செய்யவேண்டும். இவ்வாறு செய்வதிலும் பலரும் ஒன்றுகூடி ஒரு தொழிலைச் செய்யவேண்டும். ஒவ்வொருவரும் தனித்தனி ஒரு வேலையைச் செய்வதைப் பார்க்கிலும் பலரும் கூடிச் செய்வது பல நன்மைதரும். நாம் தொடங்கிய வேலையும் எளிதில் முடியும். மிகுதியும் பணச் செலவு இராது. காலமும் நீடிக்காது. ஆதலால் நாம் எத் தொழிலைச் செய்தாலும் ஒற்றுமையா

யிருந்து ஒரு தொழிலைச் செய்யவேண்டும். அவ்வாறு செய்வதற்குத் தக்க இடம் கிராமமே. முற்காலத்தில் நமது கிராமமே எல்லாத் தொழிலுக்கும் ஏற்ற இடமாயிருந்தது. நமது முன்னோர்களும் ஒன்றுகூடியே பாடுபட்டார்கள். அவர்களும் சௌக்கியமாக வாழ்ந்து வந்தார்கள். கிராமமும் சீர்பெற்றிருந்தது. கிராமத்தில் நடக்கும் தொழில்களெல்லாம் செவ்வையாக நடந்தால்தான் கிராமம் சிறந்து விளங்கும். முன்னேற்றமுமடையும்.

ஆதலால், ஒரு கிராமம் முன்னேற்றமடைவதற்கு அக்கிராமத்தில் வாழும் குடிகள் யாவரும் ஒரு மனதாய் இருந்து வஞ்சகமில்லாமல் உழைக்க வேண்டும். இதுபோலவே ஒரு தேசத்திலுள்ள மக்கள் பலரும் ஒன்றுகூடி உழைக்க வேண்டும். எந்தத் தேசத்திலுள்ள மக்கள், வஞ்சகமில்லாது ஊக்கமாகப் பாடுபடுகிறார்களோ, அந்தத் தேசம் நாளுக்கு நாள் விருத்தியடைந்து செல்வத்தில் சிறந்து விளங்கும்.

எந்தத் தேச மக்கள் ஒற்றுமையில்லாமல் சோம்பேறித்தனமாகப் பொழுது போக்குகின்றார்களோ, அந்தத் தேசம் நாளுக்கு நாள் வறுமையடைந்து கீழான நிலையை யடையும்.

இங்கிலாந்து, அமெரிக்கா, ஜப்பான் முதலிய தேசங்கள் மற்ற தேசங்களை விடச் சிறந்திருப்பதற்குக் காரணம், அங்கிருக்கும் மக்கள் விடாமுயற்சியுடன் பாடுபட்டு வருவதேயாகும்.

பிள்ளைகளே! மற்ற தேசங்களுக்கு இருக்கிற உயர்வு நமது இந்து தேசத்திற்கு இப்பொழுது இருக்கிறதா? இல்லை. ஏன்? நாம் வசிக்கும் இந்தப் பரதகண்டத்தில் மக்கள் குறைவா? முப்பத்தைந்துகோடி மக்கள் அல்லவா இருக்கின்றார்கள். பொருள்களுக்குக் குறைவா? அதுவுமில்லை. சுருக்கமாகக் கூறினால் நமது தேசத்தில் இல்லாத பொருள்களே உலகத்தில் இல்லை. அப்படியிருந்தும், நமது நாட்டார் பாடுபட்டு உழைப்பதில்லை. பாடுபட்டு உழைத்தால் தங்களுக்கு அவமானமென்று எண்ணித் தங்கள் தொழில்களை யெல்லாம் விட்டொழித்து, எல்லோரும் அடிமைத் தொழிலாகிய உத்தியோகத்தையே விரும்புகின்றார்கள். இவர்களது அறியாமையை என்னென்று சொல்லுவது? அந்தோ! இவர்கள் தமது சிறந்த தொழில்களை யெல்லாம் கைவிட்டுவிட்டார்கள். பல தொழில்களும் ஒழிந்துபோயின. யாவருக்கும் உத்தியோகமும் அரிதாய் விட்டது. யாவரும் உத்தியோகத்தையே விரும்பிப் போட்டி போடுவதால் தமக்குள் பகைமையும் ஏற்படுகிறது.

ஒரு சிலர் தங்களுக்குத் திடமான உறுப்புக்களிருந்தும் வறிதே சோம்பியிருக்கின்றனர். இன்னும் சிலர் வருந்தி உழைக்க மனமில்லாது மானமிழந்து இரந்து திரிகின்றனர். கண்ணும் காதும் இல்லாத அங்கவீனர்களுக்கும், வலிமை யில்லாதவர்க்கும், வயது சென்றவர்க்கும் கொடுப்பதே அறமாகும்.

இவ்வாறின்றி உறுப்புக்க ளிருந்தும், உழைப்பதற்குத் திறமை யிருந்தும், வீணே சோம்பேறியா யிருக்கின்றவர்களுக்குச் சிலர் தர்மம் செய்கிறார்கள். இவ்வாறு செய்வது அறமாகாது. இது அவர்களுடைய சோம்பேறித்தனத்தை வளர்ப்பதாகும். இப்படிப் பட்டவர்களுக்குக் கொடுப்பது, அவர்களைக் கெடுப்பதுவுமன்றி, தம் தேசத்தையும் கெடுப்பதாகும். இப்படிப்பட்டவர்கள் தொழில் செய்யத் தெரியாதபோது கூலிவேலை செய்தாவது பிழைக்கலா மல்லவா? கூலிக்காரர்கள் அதிகமானால் கூலியும் குறையும். வேலையும் விரைவில் முடியும். தொழிலும் விருத்தியடையும்.

இவ்வாறு பாடுபடுவதால் பணமும் கிடைக்கும். உடம்பும் உரம்பெறும். பாடுபட்டுழைப்பவர்களுக்கு சாதாரணமாகப் பிணி வாராது. அவர்களது எண்ணமும் எப்பொழுதும் தொழிலைப் பற்றியதாகவே யிருக்கும். அத

ஞல் தீய எண்ணங்களுக்கு இடமிராது. தீய செயல்கள் உண்டாகா. அவர்களும் நாளுக்கு நாள் தொழிலில் விருத்தியடைந்து புகழ் பெறு வார்கள். சில சோம்பேறிகள் எந்த வேலை யையும் செய்யாமல் சுகமாயிருக்க விரும்பி வீணே காலத்தைக் கழிப்பார்கள். ஆனல், உழைப்பாளிக்கு உண்டாகும் சுகத்தில் நூற் றில் ஒரு பங்கு கூடச் சோம்பேறிகளுக்கு உண்டாகாது.

முயற்சியுடையார் இகழ்ச்சியடையார்.



## 2. தேக்கு மரம்

மனிதர்களுக்குப் பயன் படுவன வாகிய பலவகை மரங்களில் தேக்கு மரம் ஒன்று. மரங்கள் பலவற்றுள்ளும் தேக்கு முதன்மை யாக விளங்குகிறது. இது மிக உயரமாக வள ரும் தன்மையுடையது. இம்மரம் சுமார் அறு பது அடி உயரம் முதல் எழுபதடி உயரம் வரையிலும் வளரும். இவ்வளவு உயரம் வளர்வதற்குச் சுமார் ஐம்பது ஆண்டுகள் செல்லும். இம்மரம் முதிர்ந்த பருவத்தில் இதன் அடிப்பாகம் சுமார் ஏழு அல்லது எட்டு அடி சுற்றளவுள்ளதாய் இருக்கும்.

இதன் இலைகள் மிகுதியும் தடித்து அகல முள்ளதா யிருக்கும். இவ்விலைகளை ஒன்று சேர்த்துத் தைத்து உண்கலமாக உபயோகிக்க லாம். இம்மரத்தின் நுனிக் கிளைகளில் பூக்கள் கொத்தாக உண்டாகும். அம்மலர்களில் பிஞ்சு களுண்டாய்க் காய்த்துப் பழுக்கும். அப்பழங் கள் வட்டவடிவமாய்க் கொட்டைப் பாக்கைப் போல் கெட்டியாயிருக்கும்.

தேக்கு மரங்கள் மலைகளிலும், மலைகளை யடுத்திருக்கும் காடுகளிலும் உண்டாகும். இக் காலத்தில் மலையாள நாட்டிலும், மைசூர்க் காடுகளிலும், பர்மாவிலும், இலங்கைத் தீவி லும் மிகுதியாக உற்பத்தியாகின்றன. இவை களில் பர்மாவில் உற்பத்தியாகும் தேக்குமரமே சிறந்ததெனப் பாராட்டப்படுகிறது.

மலைகளின் மேற்பாகங்களில் வெட்டப் படும் தேக்குமரங்களை யானைகள் அடிவாரத் துக்குக் கொண்டு வந்து சேர்க்கும். பின்னர் கட்டை வண்டிகளிலும், புகைவண்டிகளிலும் ஏற்றிப் பற்பல நாடுகளுக்குக் கொண்டு போவர். பர்மாவின் தேக்கு மரங்கள் கப்ப லின் மூலமாக இந்தியாவிற்குக் கொண்டுவரப் படுகின்றன.

நமது நாட்டில் காடுகளில் வெட்டப்பட்ட மரங்களைத் தொழிற்சாலைக்குக் கொண்டுபோய்ச்

சேர்த்தல், அவற்றை ஒன்றின்மேல் ஒன்ருக அடுக்கி வைத்தல் முதலியவைகளை யானைகள் மிருதியாகச் செய்து வருகின்றன. மலையாளத்திலும் பாலக்காட்டுப் பக்கங்களிலும் இருக்கும் மரத் தொழிலாளிகள் மிருதியும் கைதேர்ந்தவர்கள். இவர்கள் பெரிய மரங்களையும் மிக ஒழுங்காகவும் எளிதாகவும் அறுப்பதில் வல்லமை யுடையவர்கள்.

தேக்கிலையிலிருந்து செந்நிறச் சாயம் உற்பத்தி செய்வார்கள். இம் மரத்திலிருந்து ஒருவிதத் தைலம் செய்வர். அத் தைலத்தைப் பூசினல் பளபளப்பா யிருக்கும். தேக்கு மரம் நன்ருக முதிர்ந்த பின்பு வெட்டி, மேல் பட்டையைப் போக்கிவிட்டுக் காயவைப்பார்கள். பிற்பாடு மரத்திலுள்ள ஈரம் உலர்ந்த பின்பு சிறியனவும் பெரியனவுமாகிய கட்டைகளாகவும், கைமரங்களாகவும், பலகைகளாகவும் அறுப்பார்கள். மேற்பட்டை நீங்கிய மரம் மங்கலான கருமையும் சிவப்பும் கலந்த நிறமுள்ளதா யிருக்கும். உட்பாகம் பொன்னிறமா யிருக்கும். இம்மரத்தை அறுக்கும்போது ஒருவிதமான நல்ல மணம் வீசும். இதில் எண்ணெய்ப்பசை கலந்திருப்பதால், இதை இழைப்புளியால் இழைக்கும்போது இழைக்க இழைக்க வழுவழுப்பா யிருக்கும்.

இம்மரத்தை அறுத்துப் பலகையாக்கிச் செவ்வையாக இழைத்து மேன்மைப் படுத்தி மெருகெண்ணெய் தடவினால் கண்ணாடிபோல் விளங்கும். இதில் தைலச் சத்திருப்பதால், இதில் செல்லேற மாட்டாது. தண்ணீரால் கெடாது நீண்டகாலம் வரையிலும் அழியா திருக்கும். அதனால் தேக்குமரத்தைப் பெரிய கட்டிடங்களுக்கும், கப்பல்களுக்கும், உபயோ கப்படுத்துகிறார்கள்.

இன்னும் இத் தேக்கு மரத்தால் மனிதர் களுக்கு உபயோகப் படுவனவாகிய நாற்காலி கள், ஆசனங்கள், கட்டில்கள், மேஜைகள், வண்டிகள் முதலியன செய்யப்படுகின்றன. வீடுகள் கட்டப்படுகின்றன. இன்னும் மக்க ளுக்கு வேண்டிய பற்பல பொருள்களும் செய் யப்படுகின்றன.



## 3. நமது நாட்டின் நிலங்கள்

நமது நாட்டிலுள்ள நிலங்கள் பல வகைப் படும். அவை கரிசல் நிலம், சிவப்பு நிலம், உவர் நிலம், சுக்கான் நிலம், மணற் பாங்கான நிலம் முதலியனவாம்.

கரிசல் நிலம் கறுப்பு நிறமுடையதா யிருக்கும். இந்த நிலம் கோடைகாலங்களில் வெடித்திருக்கும். மழைக் காலங்களில் கால் களில் ஒட்டிக்கொள்ளும்படியாக பிசுபிசுப்பா யிருக்கும். இந்த நிலம் தண்ணீரை அதிக மாக இழுத்துக்கொள்ளு மியல்புடையது. நம்முடைய தமிழ் நாட்டில் திருநெல்வேலி, மதுரை, இராமநாதபுரம், தஞ்சை, திருச்சிராப் பள்ளி, கோயம்புத்தூர் முதலிய இடங்களில் கரிசல் நிலம் அதிகமாக இருக்கிறது. இந்த நிலத்தில் பருத்தி, சோளம் முதலியவை நன்ருய் வளரும். அவுரி, கொத்துக்கடலை, கோதுமை இவைகளையும் பயிர் செய்கிருர்கள்.

சில நிலங்கள் சிவப்பு நிறமாயிருக்கும். சிவந்த பாறைகளினுடைய பொடிகளினல் இந்த மண் உண்டாயிருப்பதாகத் தெரிகிறது. இந்த நிலம் வானத்திலுள்ள நீரை இழுக்கும். நமது நாட்டிலுள்ள மேடுள்ள பாகங்கள் எல்லாம் அநேகமாகச் செம்மண்ணுகவே இருக்கின்றன. புன்செய்ப் பயிர்கள் இந்நிலங் களில் நன்ருய்ச் செழித்து வளரும். நீர் நிறைந்திருந்தால் இந்த நிலத்தில் நெல்லை யும் விளைவிக்கலாம்.

சில நிலம் உப்பாயிருக்கும். இந் நிலத்தில் உப்பு பூத்து அடை அடையாக மேல் படர்ந்

திருக்கும். உவர் நிலத்தில் பயிர் பச்சைகள் உண்டாகா; ஆயினும் புகையிலை, கீரை முதலியவைகளைப் பயிர் செய்யலாம். இந்த நிலம் சிற்சில இடங்களில் காணப்படும்.



சுக்கான் நிலம் கரிசல் நிலங்களுக்குக் கீழ் எல்லா இடங்களிலும் காணப்படும். சில இடங்களில் பூமியின் மேற்புறத்திலும் இருக்கும். இதில் பயிர் பச்சைகளைப் பயிர்செய்ய மாட்டார்கள். அவைகளும் விளையா.

சில பூமிகள் மணல் சம்பந்தமாக விருக்கும். இவைகளுக்கு மணற்பாங்கான நிலங்கள் என்று பெயர். இந்நிலங்கள் பெரும்

பாலும் சமுத்திரக்கரையை அடுத்திருக்கும். இந் நிலங்களிலுள்ள மண் ஆறுகளிலுள்ள மணல் போலிருக்கும். இந்த நிலங்களில் தென்னை, பனை, சவுக்கு முதலியவைகளே மிகுதியாகப் பயிராகின்றன.

இந்த நிலங்களைத் தவிர வேறு நிலங்களும் சில இடங்களில் உண்டு. சில நிலத்தில் எக்காலத்திலும் ஈரம் வற்றாதிருக்கும். இந்த நிலத்திற்குச் சதுப்பு நிலம் என்று பெயர். மலைப் பிரதேசங்களிலுள்ள பள்ளத்தாக்குகளே இந்தச் சதுப்பு நிலங்களாகும். இஃது ஒரு வகை நிலம். மற்றொரு நிலம், ஆறு கால் வாய்களின் வண்டல் படிந்து அவற்றின் ஓரத்தில் இருக்கும். இதற்கு அடைமண் நிலம் என்று பெயர். வண்டல் படிந்திருப்பதால் இந்த நிலத்தில் எல்லாவிதமான பயிர்களும் நன்றாய் வளரும்.

சாகுபடி செய்யும் பயிர்களுக்குத் தக்கபடி நிலத்தை மூவகையாக வகுக்கலாம். மிகுந்த தண்ணீரை விரும்பும் நெற்பயிர்களைச் சாகு படி செய்யும் நிலத்துக்கு "நன்செய்" நிலம் என்று பெயர்.

மிகுதியும் தண்ணீரை வேண்டாத கம்பு கேழ்வரகு, பருத்தி, மொச்சை, துவரை முதலிய பயிர்கள் சாகுபடி செய்யப்படும் நிலங்

களுக்குப் "புன்செய்" நிலம் என்று பெயர். இப்பயிர்கள் பெரும்பாலும் கிணற்றுத் தண்ணீரால் சாகுபடி செய்யப்படும்.

குளம் குட்டை முதலியவைகளை வெட்டி ஏற்றத்தினுல் நீரை இறைத்துப் பயிர் செய்யப்படும் நிலங்களுக்குத் தோட்டம் என்று பெயர்.



## 4. கங்கை

நமது இந்து தேசத்தில் இருக்கின்ற ஆறுகள் எல்லாவற்றிலும் கங்கையே சிறந்தது. கங்கை என்பதற்கு எப்பொழுதும் நீர் வற்றுத ஜீவ நதி என்று அர்த்தமாகும்.

முன் காலத்தில் வட நாட்டிலிருந்த சகரன் என்ற அரசனுடைய குமாரர்கள் அறுபதினுயிரம் பேர்கள் கபில முனிவனது சாபத்தினுல் இறந்துபோனுர்கள். அவர்களை நற்கதியில் செலுத்தும் பொருட்டு, அவர்களது பேரனுகிய பகீரதன் என்ற அரசன் இந்தக் கங்கையை வானத்திலிருந்து பூமிக்கு வரச் செய்தான். அதனுல் கங்கைக்குப் பாகீரதி என்ற பெயருண்டாயிற்று என்பது ஒரு பழங்கதை.

இந்தக் கங்கையாறு இமயமலையின் வடக்கேயுள்ள கங்கோத்தரி என்னும் இடத்தி

லிருந்து உற்பத்தியாகிறது. அவ்விடத்தில் அதற்குப் பாகீரதி என்று பெயர். இந்த ஆறு அவ்விடத்தில் இருபத்தேழடி அகலமும் ஓரடி ஆழமு முள்ளது. பிறகு பிரயாகை யென்னு மிடத்தில் இவ்வாறு ஒரு சிற்றா றுடன் கூடுகிறது. அவ்விடத்தில் கங்கை யென்று சொல்லப்படும். பின் அலகபாத் என் னும் நகருக் கருகில் ஒரு பெரிய நதியாகின் றது. அயோத்தி, பேகார், வங்காளம் முதலிய இடங்களின் வழியாகச் செல்லும்போது பல உபநதிகள் வந்து இவ்வாற்றுடன் கலக்கும்.

கங்கை பெரிய ஆறுவதற்குக் காரணம் அதன் இருபுறமும் வந்து கலக்கும் உபநதி களின் வெள்ளமே யாகும். வடக்கிலுள்ள இமயமலைக்குப், தெற்கிலுள்ள விந்திய மலைக் கும் இடை வெளியிலுள்ள பள்ளத்தாக்கில் பெய்யும் மழை நீர் முழுவதும் பல சிற்றாறு களாய் ஓடிக் கங்கையில் விழும்.

கங்கை உற்பத்தியாகும் இடந் தொடங்கிக் கடலோடு கலக்கும் வரையில், தனது இருகரை களிலும் பல சிறந்த நகரங்களை யுடையது. யாவரும் இந் நதியைப் புண்ணிய நதியாக வெண்ணிப் பெருமை பாராட்டுவார்கள். அதன் காரணமாக இதற்கும் பல பெயர்கள் வழங்குகின்றன. அவை, சுரநதி, வரநதி, சானவி முதலியனவாகும்.

இந் நதியின் சிறப்பால் இதன் கரையி லிருக்கும் நகரங்களும் பரிசுத்த நகரங்களாகப் பாராட்டப்படும். அவற்றுள் ஹரித்துவார மும், காசியும் அளவிறந்த சிறப்புடையன. இந் நகரங்களுக்கு ஆயிரக்கணக்கான மக்கள் யாத்திரை செல்வார்கள். கங்கையில் நீராடு வது பெரும் புண்ணியமாகக் கருதப்படுகிறது. கங்கைக்குச் சென்று நீராடித் திரும்பி வருப வர்கள் கலசங்களில் கங்கை நீரைக் கொண்டு வந்து யாவருக்கும் கொடுப்பார்கள்.

வியாபாரத்திற்கும் விவசாயத்திற்கும் இந் தியாவில் கங்கையைப்போன்ற உபயோகமான நதி வேறில்லை. கோடிக்கணக்கான மக்களின் பிழைப்புக்கு இந்த ஆறு ஒரு காரணமாகின் றது. இந்தியாவிலுள்ள எந்த ஆறும் இதற்கு ஒப்பாகாது. மழைக்காலத்தில் இது அடித் துக் கொண்டுவந்து இருகரையிலும் ஒதுக்கும். சேறும், வண்டலும் வயல்களுக்கு நல்ல உர மாகிப் பயிர்களைச் செழிப்பிக்கின்றன. வட தேசத்தின் பெரும்பாகத்திற்கு இவ் வாற்று நீரே பல கால்வாய்களின் வழியாகப் பாயும்.

ஆதிகாலந் தொடங்கிப் பெயர் பெற்ற நகரங்கள் பல இவ்வாற்றினது கரையிலுண்டு. அவைகளில் சிறந்தன காசி, பாடலிபுரம் முதலியனவாகும்.



# 5. சிங்கம்

சிங்கம் காட்டு மிருகங்களில் ஒன்று. அது மற்றெல்லா விலங்குகளிலும் மிக்க பராக்கிரமமும், கம்பீரமும் உடையது. எல்லா விலங்குகளையும் அடக்கி நடத்தும் ஆண்மையுமுடையது. ஆதலால் அது மிருகேந்திரனென்று அழைக்கப்படும். அது பயங்கரமும் பெருந்தகையுமான தோற்ற முடையது. அது மற்றைய விலங்குகளைப்போல பதுங்கி யிருந்து இரை தேடாமல், நேர் நின்று போர் புரிந்து பிராணிகளைக் கொன்று தின்னும். பசிதணிந்த பின் அது சாந்தமாகத் தன்னிருப்பிடத்தி

லிருக்கும்; பசி தீர்ந்தபின் எந்தப் பிராணியை யும் தொந்தரவு செய்யாது; பிறர் தொந்தரவு செய்தாலும் அதனைப் பொருட்படுத்தாது.

சிங்கம் ஆசியா கண்டத்திலுள்ள அரே பியா, பாரசீகம், வடமேற்கு இந்தியா முதலிய தேசங்களிலுள்ள பெரிய காடுகளிலும், ஆப்பி ரிக்காக் கண்டத்திலுள்ள அடர்த்தியான வனங் களிலும் மிகுதியும் சஞ்சரிக்கும். நன்ருக ஓங்கி வளர்ந்த சிங்கம் ஐந்தடி உயரமும், வால்உள்பட எட்டு ஒன்பது அடி நீளமும் இருக்கும். இது மங்கலான மஞ்சள் நிறமுள்ளதா யிருக்கும். இந்த நிறம் கபில நிறம் எனப்படும். சில சிங் கங்கள் அவை வசிக்கும் வனத்திலுள்ள மண லின் நிறம்போலிருக்கும். அதன் விலாப்புறம் சிறிது வெளுத்திருக்கும்.

பெண் சிங்கம், ஆண் சிங்கத்தைவிட உரு வத்தில் சிறியதாயிருக்கும். ஆண்சிங்கத்திற்குப் பிடரி மயிர் உண்டு. இது நீண்டு பிடரியிலி ருந்து முழங்கால் வரை தொங்கும். பெண்சிங் கத்திற்குப் பிடரிமயிர் இல்லை. இவைகள் பூனை இனத்தைச் சேர்ந்தவை. இவை பகல் முழு வதும் குகையில் படுத்திருந்து இரவில் இரை தேடப் புறப்படும். இதன் கர்ச்சனையைக் கேட்டு மற்ற விலங்குகளெல்லாம் சிதறியோ டும். அச் சமயத்தில் சிங்கம் அவற்றைப்

பிடித்துக் கொல்லும். யானையின் மத்தகத்திற் பாய்ந்து அடித்து அதன் இரத்தத்தைக் குடிக்கும். மனிதனைக் கண்டாலும் கொன்று தின்னும்.

சிங்கத்திற்கு இடை சிறுத்தும், மார்பு அகன்றுமிருக்கும். அதன் மேல்வாயில் கூரிய பற்கள் ஆறும், கீழ்வாயில் ஆறும் இருக்கின்றன.

இதற்கும் நீண்ட மீசை மயிர்கள் உண்டு. இதன் கண்கள் வட்டமானவை. இதன் கண்ணின் கருவிழிகள், பகலில் நீண்ட கோடு போலவும், இரவில் வட்டமாகவும் தோன்றும். அதனால் அது இரவில் எதையும் நன்றாய்ப் பார்க்கும்.

சிங்கத்தின் நாக்குச் சிறுத்து நீண்டு, அரம் போல் சொறசொறப்பா யிருக்கும். காதுகள் வட்டமாயும் நுனி சிறிது நீண்டு மிருக்கும். அதன் கன்னம் மிகவும் உறுதியானது. அதன் கால்கள் மிகவும் உறுதியானவை. பாதங்களில் நீண்டு வளைந்த கூரிய நகங்களுண்டு. பாதம் பட்டுப்போல் மெத்தென்றிருக்கும். ஆகையால் அது நடக்கும்போது ஓசை கேட்காது. அது தன் கால் நகங்களை வெளியே நீட்டவும் சுருக்கவும் கூடும். அதன் வால் நுனியில் மயிர்க்குச்சம் உண்டு. அது தன் வாலை வீசி

யடித்தால் பலசாலிகளும் அவ்வடியைத் தாங்க முடியாது கீழே விழுந்து விடுவார்கள்.

பெண் சிங்கம் தடவைக்கு ஒன்று முதல் நான்கு குட்டிகள்வரை போடும். அது மனிதர் கைக்கு அகப்படுவது அரிது. அது கொடிய மிருகமானதால் அதை வேட்டையாடிப் பிடிப்பது மிகவும் துன்பத்துக் கிடமானது. வேட்டையாடுவோர் இதைக் கொன்றுபோடுவார்கள். துட்ட மிருக மானதால் அதைக் கொல்வோருக்கு அரசாங்கத்தார் வெகுமதி கொடுக்கிறார்கள். இதைத் தந்திரமாகப் பிடித்து மிருகக் காட்சி சாலைகளில் வைத்து வளர்க்கிறார்கள்.



## 6. வேளாண்மை

வேளாண்மை என்பது பயிர்த் தொழிலாகும். இதற்கு உழவுத் தொழில், விவசாயம் என்ற பெயர்களுமுண்டு. வேளாண்மை என்பதற்கு உபகாரம் என்று பொருளாகும். இது பிறருக்கு உபகாரமான தொழிலாகையால் இதற்கு "வேளாண்மை" என்னும் பெயர் ஏற்பட்டது.

மனித வாழ்க்கைக்கு வேண்டிய பொருள் களைத் தேடுவதற்கு பல தொழில்கள் ஏற்பட் டிருக்கின்றன. நமக்கு வேண்டிய பொருட் களில் அவசியமானவை நாம் உண்ணும் உணவுப் பொருட்களும், உடுக்கும் உடையும் பிற பொருட்களுமாகும். நாம் பிறபொருட் கள் இல்லாமலும் இருக்கலாம்; உடையின்றி இருக்க முடியாது. நாம் உடுக்கும் உடை யின்றியும் இருக்கலாம்; உணவு இல்லாமல் இருக்க முடியாது. ஆகவே நமது உணவைத் தேடுவதற்குரிய உழவுத் தொழிலே மற்ற தொழில்களைவிடச் சிறந்ததாகும். இந்த உழ வுத் தொழிலைச் செய்வோர் பிறருக்கு அடி மையா யிருக்க வேண்டியதில்லை. பிறருடைய உதவியையும் எதிர்பார்க்க வேண்டியதில்லை. நன்றாக ஆராயுமிடத்து இத்தொழிலின் உதவி யின்றி உலகத்திலுள்ள மற்ற தொழில்களெல் லாம் நடைபெறுதென்று சொல்லலாம். ஆத லால் பெரியோர்கள் இத் தொழிலைச் சிறந்த தொழிலாகக் கொண்டு பாராட்டுகின்றார்கள். "தொழுது ஊண் சுவையின் உழுது ஊண் இனிது" என்றும் "சீரைத்தேடின் ஏரைத் தேடு" என்றும் "உழுதுண்டு வாழ்வாரே வாழ்வார்" என்றும் கொண்டாடுகின்றார்கள்.

இப்படிப்பட்ட சிறந்த உழவுத் தொழி லைச் செய்வதற்குத் தகுந்ததுபோல, நமது

நாட்டில் உயர்ந்த நீர் நிலைகளும், நன்னிலங்களும், கருவிகளும் அமைந்திருக்கின்றன. இவற்றைக் கொண்டே நமது நாட்டில்வாழ்ந்த நமது முன்னோர்கள் மிக ஊக்கத்துடன் பயிர்த் தொழில் செய்து நல்ல பயனை அடைந்து வந்தார்கள்.

ஆனால் இக்காலத்திலோ நம்மவர்களில் பலர் இத்தொழிலின் உயர்வைக் கருதிப் பாராமல் உத்தியோகமே சிறந்ததென்று கொண்டு அதனைக் கைவிட்டார்கள். அதனாலே நமது பயிர்த்தொழிலும் குன்றியது. நமது நாடும் சீர்குலைந்தது. நாமும் வறுமைத் துன்பத்திற்கு ஆளானோம்.

ஆனால் அமெரிக்கா ஐரோப்பாவிலுள்ள மக்கள் கைத்தொழில் வாணிபம் முதலியவற்றை விருத்தி செய்து பொருள் சேர்ப்பது போலவே, பயிர்த் தொழிலின் சிறப்பையும் உணர்ந்து அதனை மிக ஊக்கத்துடன் செய்து பயனடைகின்றார்கள். நம்மவர்களும் இதனை உணர்ந்து பயிர்த்தொழிலில் மனவூக்கமுடையவர்களாய் அதைச் செவ்வையாகக் கையாண்டு வருவார்களாயின் நாமும் வறுமையற்று வாழ்வோம்.

நமது நாட்டில் பெரும்பாலும் பயிர்த் தொழில் செய்வோர் படியாதவர்களாகவே

இருக்கின்றார்கள். அதனால் அவர்கள் முன்னோர்கள் கையாண்ட முறையையே பின்பற்றி உழவுத் தொழிலைச் செய்து வருகின்றார்கள். இவ்வாறின்றி உழவுத் தொழில் படித்தவர்களால் கையாளப்பட்டு வருமானால் மிகுதியும் பயன் தரும். அவர்களும் புதிய முறைகளைத் தெரிந்து அதற்குத் தக்கதுபோல் தொழில் செய்யின் முன்னிலும் பலன் மிகுதியாகக் கிடைக்கும்.

பயிர்த்தொழில் செய்வோர் நிலத்தின் வகைகளையும், வித்தின் இயற்கையையும், பயிரிடும் காலத்தையும், நிலத்திற்கு வேண்டும் உரங்களையும், பயிரிடும் வகையையும், அதைப் பாதுகாக்கும் வகையையும் பற்றித் தெரிந்து கொள்ளல் வேண்டும். அன்றியும் உழவுக்கு வேண்டும் கருவிகளைப் பற்றியும், கால் நடைகளை நோயின்றிப் பாதுகாக்கும் வகையைப் பற்றியும் தெரிந்துகொள்வது அவசியமாகும். இம்முறையைத் தெரிந்து தொழில் செய்பவர்கள் மிகுந்த பலனை அடைவார்கள்.

நிலங்கள் மண்ணின் பேதங்களினால் பலவகைப்படும். மண்ணில், செம்மண், கரிசல்மண், களிமண், வெண்மண், சரளைமண், மணல் எனப் பலவகையுண்டு.

இவற்றில் ஒன்ருேடொன்று சேர்ந்து உண்டாகிய கலப்பு மண்களுமுண்டு. பயிரிடுவோர் இம் மண்ணின் வகைகளை யறிந்து அதற்கேற்ற மண்ணில் பயிர்த்தொழில் செய்ய வேண்டும்.

இவ்வாறு நடத்தும் தொழில் இருவகைப்படும். அவை நன்செய் வேளாண்மை, புன்செய் வேளாண்மையாகும். நெல், வாழை, கரும்பு, வெற்றிலை முதலியன நன்செய் வேளாண்மை எனப்படும். இவற்றிற்கு உரிய நிலம் நீர்ப் பாய்ச்சலுள்ள விடமா யிருக்க வேண்டும்.

கேழ்வரகு, கம்பு, சோளம், துவரை, கடலை, மொச்சை, பருத்தி, வேர்க்கடலை, கொள்ளு முதலியன புன்செய் வேளாண்மை எனப்படும். இவற்றிற்குரிய இடம் மழை நீரையோ கிணற்று நீரையோ எதிர்பார்த்திருக்கும் மேட்டுப்பாங்கான நிலமாம்.

இவைகள் மண்ணின் சாரத்துக்குத் தக்கபடி பயிராகும். நீர் வசதியுள்ள எல்லா நிலங்களிலும் நெல் பயிராகும். ஆனுல் கரிசல் மண்ணில்தான் நெற்பயிர் மிகுந்த பயனைத் தரும். வாழை, வெற்றிலை முதலியன தைலச்சத்துள்ள கரிசல் மணலில் விருத்தியாகும். மேட்டுப்பாங்கான கரிசல் மண்ணில் கம்பு

தினை முதலியன பயிராகும். துவரை மொச்சை நிலக்கடலை முதலியன செம்மண்ணில் பயிராகும். மணற்பாங்கான இடங்களில் சவுக்கு விருத்தியாகும்.



# 7. வீரத் தாய்

ஒரூரில் ஒரு செல்வன் இருந்தான். அவன் நீண்ட நாளாக நோயால் வருந்திக் கொண் டிருந்தான். அதனால் அவன் எழுந்திருக்கவும் முடியாது படுத்த படுக்கையில் இருந்தான். அவனுக்கு ஒரு மனைவி இருந்தாள். அவள் தனது கணவனிடத்தில் மிகுந்த அன்புடையவள். தன் நாயகனுக்கு மனம் கோணமல் பணி செய்வாள். ஒரு சிறிதும் மனம் வெறுக்காள். தனது நாயகன் நோயினால் வருந்துவதைப் பார்த்து மனம் வருந்துவாள். அரைக் கணமும் அவனை விட்டுப் பிரியாள். எந்நேரமும் தனது கணவனது சுகத்தையே விரும்பிக்கொண் டிருப்பாள். அவன் எப்போது குணமடைவான் என்ற எண்ணமே அவள் மனதில் குடிகொண் டிருந்தது.

அந்த மனிதனது செல்வத்தைக் கண்டு ஒரு சிலர் பொறாமை கொண்டார்கள். அவனது செல்வத்தைக் களவு செய்ய எண்ணினர்

கள். செல்வன் நோயால் வருந்திக்கொண்டிருப்பதைத் தெரிந்து கொண்டார்கள். அவனை வஞ்சிக்கச் சமயம் பார்த்துக்கொண்டிருந்தார்கள்.

ஒருநாள் இரவு நிறைந்த இருளாய் இருந்தது. அப்பொழுது அவர்கள் எல்லோரும் ஒன்று கூடினார்கள். கையில் பலவகை ஆயுதங்களை எடுத்துக்கொண்டு அவன் வீட்டுக்குச் சென்று கதவைத் தட்டினார்கள். அங்கு இருந்த வேலைக்காரர்களைப் பிடித்துக் கட்டிப் போட்டுவிட்டு, கதவைப் பிளக்க எத்தனித்தனர்.

இவற்றை எல்லாம் கேட்டுக் கொண்டே தன் புருஷன் அருகே இருந்த அவ் வீட்டுக்காரி திடுக்கிட்டுப் பயந்தாள். பின் ஒருவாறு தேறினாள். தன் நாயகன் இருந்த அறையைப் பூட்டிட்டாள். விரைவாக மற்றொரு அறைக்குட் புகுந்து, தன் நாயகனது உடைகளைத் தரித்துக்கொண்டு புறப்பட்டாள். அதற்குள் அவ் வஞ்சகர்கள் வீட்டினுள்ளே புகுந்துவிட்டார்கள். அவளும் நேராக அவர்களிடம் சென்றாள். “ஐயா! என்னை ஒன்றுஞ் செய்யாதீர்கள். உங்களுக்குத் திரவியங்கள் இருக்கும் இடத்தைக் காட்டுகிறேன். வேண்டியதை எடுத்துக் கொள்ளுங்கள்” என்றாள்.

அவர்களும் அதற்குச் சம்மதித்து "எங்கே திரவியம், எங்கே திரவியம், காட்டு, காட்டு" என்று அவளைத் தொடர்ந்து சென்றார்கள். அவளும் அவர்களை அழைத்துக் கொண்டு சென்று, இரண்டு மூன்று கட்டுக்கப்புறம் உள்ள ஓர் அறைக்குட் புகுந்தாள். அவர்களும் உள்ளே சென்று "பெட்டிகள் எங்கே" என்றார்கள். அவள் அவ்வறைக்குட் புகுந்ததும், அங்கு விரித்திருந்த இரத்தினக் கம்பளத்தை அப்புறப் படுத்தினாள். பூமியில் சாத்தப்பட்டிருந்த இரும்புக் கதவைத் திறக்கச் சொன்னாள். அவர்களும் அக் கதவைத் திறந்தனர். திறந்ததும், அதன் உள்ளே யிருந்த படியின் வழியாக அப் பெண் செல்ல, அவர்களும் பின்னே சென்றார்கள்.

நிலவறையை அடைந்தவுடன் அங்கிருந்த பெட்டிகளைக் காட்டி, "உங்களுக்கு வேண்டும் பொருள்களை எடுத்துக் கொள்ளுங்கள்" என்றாள். அப்போது அவர்கள் அதிக ஆவலோடு "திறவுகோல் எங்கே கொடு" என்றார்கள்.

அவளும், திடுக்கிட்டு "ஐயோ! திறவுகோலை எடுக்காமல் வந்துவிட்டேனே" என்று மறந்து விட்டவள்போல் பாசாங்கு செய்தாள். பிறகு அவர்களைப் பார்த்து "நீங்கள் எல்லோரும் இங்கேயே இருங்கள். ஒரு நொடியில் திறவுகோலை எடுத்து வருகின்றேன்" என்று திறவு

கோலை எடுக்கச் செல்பவள்போல் விரைந்து படிமீது ஏறி மேலே வந்து திறக்கப்பட்டிருந்த கதவைக் காலால் உதைத்தனள். அது இரும்புக் கதவானபடியால் உடனே சாத்திக் கொண்டது. அவளும் அதைப் பூட்டிவிட்டு வாசலண்டை வந்து பார்த்தாள். தன் வீட்டு வேலைக்காரர்கள் யாவரும் கட்டப்பட்டிருந்தார்கள். அவர்களை எல்லாம் கட்டவிழ்த்து விட்டு சிறிது தூரத்தில் குடியிருந்த குடிமக்களைக் கூட்டி வரும்படி அனுப்பினாள்.

அவர்களும் சென்று அவர்களை அழைத்து வந்தார்கள். அவர்கள் வந்ததும், யாவரும் கூடி அத் திருடர்களைப் பிடித்துக் கட்டி ஊர்க் காவலரிடம் ஒப்பித்தார்கள்.

இவ்விதமாக அந்தப் பெண் ஆண் வேடம் தரித்து தன் புருஷனைக் காப்பாற்றாவிடில், அவர்கள் அவளுடைய கணவனைக் கொன்றிருப்பார்கள்.

பாலர்களே! இப் பெண்ணின் வீரத்தைப் பார்த்தீர்களா? இவளது அஞ்சாமையை என்னென்போம். இவள் போன்ற பல பெண் மணிகள் நமது நாட்டில் இருந்தார்கள்; இப்பொழுதும் இருக்கிறார்கள். நாமெல்லோரும் அவர்களது சந்ததிகள். ஆதலால் நீங்களும் வீரர்களாக விளங்குவீர்களாக.

# 8. திருப்பாணுழ்வார்

சோழ தேசத்திற்குத் தலைநகரமா யிருந்த உறையூர் என்ற நகரில் திருப்பாணுழ்வார் தோன்றினுர். பாட்டுப் பாடுகின்ற குலத்தைச் சேர்ந்த பாணன் ஒருவன் அவரை எடுத்து வளர்த்து வந்தான். அவர் வளர்ந்த பாணர் குலத்துக்கு ஏற்றபடி பாட்டுப் பாடக் கற்றுக் கொண்டார். ஆதலால் அவருக்கு பாணர் என்ற பெயருண்டாயிற்று. அவர் எப்பொழுதும் உறையூருக்கு அருகிலுள்ள திருவரங்கத்திலுள்ள பெருமாளையே துதித்துப் பாடி வருவார். அவர் வளர்ந்த குலம் தாழ்வாகக் கருதப்பட்டது. ஆதலால் அவர் கோவிலுக்குப் போக முடிவதில்லை.

ஒருநாள் பாணர் காவேரிக்கரையிலிருந்தே திருவரங்கக் கோவில் இருக்கும் திசை நோக்கிக் கைகூப்பி வணங்கி ஆடிப் பாடிக்கொண்டிருந்தார். அப்பொழுது பெருமாள் அபிஷேகத்தின் பொருட்டு நீர் எடுத்துச் செல்ல ஒரு ஐயங்கார் வந்தார். அவர் பாணரை இன்னுரென்று அறியார். யாரோ தீண்டாதவர் என்றெண்ணித் "தூரச் செல்" என்ருர். பாடிக்கொண்டிருந்த பாணர் அப்புறம் செல்லவில்லை. அதைக்கண்ட மற்றவர்கள் அப் பாணர்மீது கற்களை வாரி எறிந்தார்கள். பாணர் பக்தியினுல்

கண்ணை மூடிக்கொண்டு தம்மை மறந்து பாடிக் கொண்டிருந்தார். ஆதலால் அவர் தம்மீது எறிந்த கல்லைப் பற்றித் தெரிந்து கொள்ள வில்லை.

அச்சமயம் திருவரங்கத்திலுள்ள பெருமாளுடைய நெற்றியிலிருந்து இரத்தம் பெருகியது. அருகிலிருந்தவர்கள் அதனைக் கண்டு "ஐயோ! என்ன பிழை செய்தோமோ தெரிய வில்லை" என்று எண்ணி அச்சமுற்று பூமியில் விழுந்து விழுந்து பணிவாராயினர். அன்றிரவு பட்டர்கள் எல்லோரும் உறங்காமல் கவலைகொண்டு வருந்திக்கொண் டிருந்தார்கள். பாணருக்கு அருள் செய்வதற்குத் திருவரங்கப் பெருமாள் மனதில் எண்ணங் கொண்டார். தண்ணீர் கொண்டுவரக் காவிரிக்குப் போன பட்டருடைய கனவிலே பெருமாள் தோன்றினார். "பாணன் என்னுடைய அன்பன். நீ நாளை விடிந்ததும் சென்று அவனை உனது தோளில் தூக்கிக்கொண்டு வந்து எனது முன்னர் விடுவாய்" என்று சொல்லி மறைந்து போயினர்.

பட்டர் அந்தக் கனவைக் கண்டதும் திடுக்கிட்டு எழுந்தார். பெருமாளைப் பலவாறு துதித்தார். பாணருடைய பெருமையை அப்பொழுது தெரிந்தார். பொழுது விடிந்தது. பட்டரும் தனக்குக் கனவிலே பகவான் சொன்

னதை அன்பர்களுக்கெல்லாம் அறிவித்தார். அதைக் கேட்ட யாவரும் ஆச்சரியமுற்றுப் பாணரைப் பார்க்கும்பொருட்டுக் காவேரிக்குச் சென்றனர். பாணரும் வழக்கம்போல் காவேரிக்கரைக்கு வந்து நீராடிவிட்டுப் பெருமானைத் துதித்துப் பாடி ஆடிக்கொண் டிருந்தார். பாணர் மெய்ம்மறந்து பாடுவாராயினர். அவருடைய கண்களிலிருந்து நீர் பெருகிற்று. அதைக்கண்ட யாவரும் சிறந்த அன்பர்! சிறந்த பக்தர்! என்று பலவாறு அவரைப் புகழ்ந்து கொண்டாடினுர்கள்.

பாணர் இவ்வாறு தமது இருகண்களையும் மூடிக்கொண்டு தம்மை மறந்து துதித்துக் கொண்டிருந்தார். பட்டர் வழக்கம்போல் நீராடிவிட்டு, அவரிடம் சென்று "சுவாமி, கோவிலுக்குப்போக எழுந்தருள வேண்டும்" என்றுர். பாணர் திடுக்கிட்டுக் கண்விழித்துப் பார்த்தார். முதல் நாளில் நம்மை எட்டிப்போ என்று உரைத்த பட்டர் தமது கிட்ட இருப்பதையுணர்ந்தார். வழக்கம்போல தூர விலகினுர். பட்டர் அவரைக் கிட்டி மறுபடியும் "சுவாமி, கோவிலுக்கு எழுந்தருள வேண்டு" மென்று வேண்டிக்கொண்டார்.

பாணரும், "நான் கீழ்க் குலத்தான். எம் பெருமான் கோவிலுக்கு வரத் தகாதவன்"

என்ருர். உடனே பட்டர் அவரைப்பார்த்து "சுவாமி, உம்மைத் தோளிலே தூக்கிக் கொண்டு வந்து தனக்கு முன்னே விடும்படி எம்பெருமான் கனவிலே தோன்றி எனக்குக் கட்டளை யிட்டிருக்கிருர். நான் அதை மீறலாகாது. தேவரீர் எனது தோளின்மீது ஏறிக் கொள்ளும், போவோம்" என்று சொல்லித் தாழ்ந்தார்.

பாணர் என்ன செய்வார். அவரை அறியாது கண்களினின்றும் நீர் பெருகியது. அவருக்கு ஒன்றுந் தோன்றவில்லை. பேசாது நின்று விட்டார். பட்டர் தாமே அவரை எடுத்துத் தமது தோளில் வைத்துக்கொண்டு நடந்தார்.

அடியார்கள் யாவரும் ஒன்று கூடிப் பின்னே சென்றனர். அப்பொழுது வாத்தியங்கள் முழங்கின. பட்டரும் பாணரைத் தூக்கிச் சென்று கோவிலில் பெருமாள் முன்னே கொண்டுபோய் இறக்கினுர்.

பெருமாள் பக்தியில் ஆழ்ந்த பாணரும் பெருமாள் முன்னர் கைகூப்பி நின்ற வண்ணமாகவே இருந்தார். பெருமாளும் அவருக்கு அருள் புரிந்தார். சிறிது நேரத்திற்கெல்லாம் பட்டர் யாவரும் ஆழ்வாரைக் காணவில்லை.

பிள்ளைகளே! இதனால் நீங்கள் என்ன தெரிந்து கொண்டீர்கள்? சாதியால் உயர்வு தாழ்வு இல்லை. யாவரும் கடவுளைத் துதிக்கலாம். யாவருக்கும் கடவுள் துணை செய்வார் என்ற நீதிகள் விளங்குகின்றன அல்லவா!



# 9. பழமொழிகள்

## கல்வி

1. சென்ற இடமெல்லாம் சிறப்பே தரும் கல்வி.
2. குலவித்தை கற்றுப் பாதி, கல்லாமல் பாதி.
3. வித்துவான் அருமை வித்துவான் அறிவான்; விறகு தலையன் அறிவானா?

## பெரியோர் தன்மை

1. குப்பையில் கிடந்தாலும் குன்றிமணி நிறம் போகுமா?
2. கொல்லத் தெருவில் ஊசி விலை போகுமா?
3. கடலிலே துரும்பு கிடந்தாலும், மனதிலே ஒரு சொல் கிடவாது.

4. நல்லவர் கண்ணில் நாகம் அகப்பட்டாலும் கொல்லார்.

## சிறியோர் தன்மை

1. சர்க்கரையும் மணலும் சரியாகுமா?
2. மூர்க்கரும்முதலையும்கொண்டதுவிடா.
3. சந்திரனைப் பார்த்து நாய் குலைத்தாவதென்ன?
4. தவளை தன் வாயால் கெடும்.

## முயற்சி

1. வருந்தினால் வாராதது இல்லை.
2. உடையவன் போகா வேலை ஒரு முழம் கட்டை.

## பொருள்

1. ஈட்டி எட்டின மட்டும் குத்தும், பணம் பதின்காத தூரம் குத்தும்.
2. பலதுளி பெரு வெள்ளம்.
3. கொடுத்தது கேட்டால் அடுத்தது பகை.



# 10. விதை முளைத்தல்

பிள்ளைகளே! நீங்கள் செடி கொடி மரங்களைப்பார்த்திருப்பீர்கள். அவைகளுக்கு என்ன பெயர் தெரியுமா? தாவரம் என்று பெயர். இந்தத் தாவரங்களின் விருத்திக்கு ஆதாரமாயுள்ளது அதன் பாகங்களில் ஒன்றாகிய விதைகளேயாகும். இந்த விதை நன்றாய் முதிர்ந்த பழத்திலிருந்து கிடைக்கும்.

இந்த விதைகளை யெல்லாம், "ஒற்றைப் பருப்பு விதை" யென்றும், "இரட்டைப் பருப்பு விதை" யென்றும் இரண்டு வகையாகப் பிரிப்பார்கள். தென்னை, கோதுமை, கம்பு, சோளம் முதலியவற்றின் விதைகளே ஒற்றைப் பருப்புள்ள விதைகளெனப்படும். மா, புளி, மொச்சை, அவரை, பட்டாணி, கடலை முதலியவைகள் போன்ற விதைகளை இரட்டைப் பருப்புள்ள விதைகளெனப்படும். இவ்விதைகளில் தாவரங்களின் பிரிவுகளாகிய தண்டு, இலை, இவைகள் நமது கண்ணுக்குப் புலப்படாதபடி அமைந்திருக்கின்றன. இவை வெளிக்கிளம்பி நமது கண்ணுக்குப் புலப்படுவதையே விதை முளைத்தல் என்கிறோம்.

முளையக் கூடிய விதைகள் பருத்துக் கனமாய் நன்கு முதிர்ந்ததாய் நன்றாகக் காய்ந்ததா

யிருக்க வேண்டும். இப்படி யில்லாவிட்டால் செவ்வையாக முளைகள் கிளம்பா. முளைகள் கிளம்பினாலும் செழித்து வளரா. தருந்த பலனும் இராது.

பூமியில் நடப்பட்ட விதை, சூரிய உஷ்ணத்தாலும், காற்றினாலும், தண்ணீராலும் பக்குவ மடைகிறது. விதைக்குள் ளிருக்கும் முளை, பருப்புக்குள்ளிருந்துகொண்டு உணவை யேற்று வளர்கிறது. வளர்ந்தபின் விதைக்குள் இருக்க இடம் இன்மையால் விதையின் தோலைப் பிளந்துகொண்டு வெளிவருகிறது. மேல்நோக்கி வெளிவருவதற்குத் தண்டு என்று பெயர். கீழ்நோக்கிப் பூமிக்குட் செல்லுவதற்கு வேர் என்று பெயர்.

விதைகள் முளைத்து வெளிக்கிளம்புவதில் ஒற்றைப் பருப்புள்ள விதைக்கும் இரட்டைப் பருப்புள்ள விதைக்கும் வித்தியாச முண்டு. ஒற்றைப்பருப்புள்ள விதையில் முளை கிளம்பு முன் அதற்கு வேண்டிய உணவு சிறிதளவே யிருக்கும். ஆதலால் முளை கிளம்பு முன்னே வேர் பூமியை நோக்கிச் செல்லும். இவ்வேர் பல சிறு கிளை வேர்களாகப் பிரிந்து பரவும். இவை பூமியிலுள்ள உணவைக் கிரகித்துத் தருவதால் முளை விரைவாக வளரும்.

இரட்டைப் பருப்புள்ள விதைகளில் வேண்டிய உணவுப் பொருள் தக்க அளவா யிருக்கிறது. ஆதலால் வேர் கீழ்நோக்கிச் செல்லும்போதே முளையும் மேல் நோக்கிச் செல்லும். இவையே இருவகைப் பருப்புக்கு முள்ள வேறுபாடாகும்.

இவ் விருவகை விதைகளும் உணவு கொள்வதிலும் முளைப்பதிலும் சில மாறுபாடு களுண்டு. உதாரணமாக அவரை விதையை எடுத்துக்கொள்வோம். இவ் விரையைப் பூமி யில் நடுவதற்கு முன் முதல் நாளில் தண்ணீ ரில் ஊறவைத்துப் பிறகு எடுத்துப் பார்த்தால் முளைகிளம்பும் இடத்தில் ஒரு தழும்பு காணப் படும். இத் தழும்பானது இரட்டைப் பருப் புக்கள் சேர்ந்திருக்கும் இடத்தில் தோன்றும் வெள்ளையான கோட்டின் முனையில் உண் டாகும். இந்த வெண்மையான கோட்டின் சத்தானது முளையாகவும் வேராகவும் தோன்று கிறது.

விதை நன்குக ஊறி யிருக்குமானல் அதன் தோல் பிளவுபட ஆரம்பிக்கும். தோலின் வெளித் தோல் உறுதியாகவும், உள்ளேயிருக்கும் தோல் மென்மையாகவும் காணப்படும். உள்ளிருக்கும் பருப்பு இரண்டு பிளவாகவிருக்கும்.

விதை முளைக்கத் தண்ணீரும் தகுந்த வெப்பமும் காற்றும் வேண்டும். முதலில் முளையானது தண்ணீரின் உதவியால் பருப்புக்களிலுள்ள உணவையுண்டு வெளிக் கிளம்பும். மேல் நோக்கிச் செல்லும் தண்டானது எப்பொழுதும் சூரியகிரணம் வரும் பக்கத்தையே நோக்கிச் செல்லும். வேர்ப்பாகம் பூமியை நோக்கிச் செல்லும். ஒரு வாரத்தில் முளை வெளிக்கிளம்பித் தண்டு விட்டு பூமிக்கு வெளியில் தோன்றும். தண்டு மேல் நோக்கி வளர்ந்து செல்லும்போது பக்கத்திலுள்ள கணுக்களில் இலைகள் உண்டாகும். இவ்வாறு தாவரங்கள் வளர்கின்றன.



# 11. சரீரத்தின் அமைப்பு

நமது சரீரத்தில் பற்பல அவயவங்கள் இருக்கின்றன. நாம் அவற்றைப் பற்றிச் சில தெரிந்துகொண் டிருக்கிறோம். நாம் உயிரோடிருக்கவும், வேலை செய்யவும், விஷயங்களைப் பற்றி நினைக்கவும் ஏதுவாக நமது உடம்பு பாடுபடுகின்றது. இதனைப் பற்றிச் சிறிது ஆராய்வோம்.

நமது உடம்பில் தலையும் உடலும், கை கால் முதலிய உறுப்புக்களும் அடங்கி யிருக்-

கின்றன. இவைகளெல்லாம் இணைக்கப்பட்ட எலும்புக் கட்டடத்தால் ஒன்ருேடொன்று சேர்க்கப்பட்டிருக்கின்றன.

நமது தலையில் கபாலமிருக்கின்றது. அது தசை, தோல், உரோமம் இவைகளால் மூடப்பட்டிருக்கிறது. கபாலத்திற்குள் மூளை யிருக்கிறது. தலையின் முன்புறத்தில் முகம் இருக்கிறது. அந்த முகத்தில், கண் காது மூக்குகளும், உண்ணும் உணவை மெல்லுவதற்கும், சுவை பார்ப்பதற்கும் வேண்டிய கருவிகளும் இருக்கின்றன. பேசுவதற்குத் துணையாகிய கருவிகளில் சிலவும் இருக்கின்றன.

தலையில் இருபத்திரண்டு எலும்புகள் உண்டு. அவைகளுள் எட்டு கபாலத்தையும், மற்றப் பதினன்கு முகத்தையும் சேர்ந்தவை. கபாலத்திலுள்ள எலும்புகளின் ஓரம் வாளின் பற்கள்போலிருக்கும். ஆதலால், அவை ஒன்ருேடொன்று நன்ருகப் பொருந்தி மிருதியும் இறுகி யிருக்கின்றன.

நமது பற்கள் முப்பத்திரண்டு. அவை முழுவதும் எலும்பல்ல. அது தந்த மென்னும் ஒருவகைப் பொருளும் வைரமான மற்ருெரு பதார்த்தமும் சேர்ந்தது. உடலில் நெஞ்சறை, உதரம் என்று இரண்டு அறைகளுண்டு. அவ் விரண்டையும் ஒருவித சவ்வு பிரிக்கின்

௨௫. இருதயம், சுவாஸாசயம் முதலிய கருவிகள் நெஞ்சறையிலிருக்கின்றன. உதரத்தில் இரைப்பை,



ஈரல், ஜலப்பை, குடல் முதலிய ஜீரணக் கருவிகள் இருக்கின்றன. நமது உணவு உட்செல்லுவதற்கு வழியாயிருக்கின்ற பெரிய குழாய், மார்புக்கும் அடி வயிற்றுக்கும் இடையே செல்லுகின்றது. இந்தக் குழாய் வாயில் ஆரம்பிக்கும். அதில் தொண்டை இரைப்பை, சிறுகுடல் பெருங்குடல் முதலியவை அடங்கி யிருக்கின்றன. சாதாரணமாக ஒரு மனிதனுடைய குடல் ஏறக்குறைய முப்பத்து மூன்றடி நீளம் உள்ளதா யிருக்கும்.

உடலில் கையும் காலும் இரண்டிரண்டா யிருக்கின்றன. கையானது புயம், முன் கை, மணிக்கட்டு, கை, விரல்கள் என ஐந்து பாகங் களை யுடையது. அப்படியே காலும் தொடை, கால், கணுக்கால், பாதம், விரல்கள் என ஐந்து பிரிவுகளை யுடையது. ஒவ்வொரு கையிலும், காலிலும் முப்பது எலும்புகள் உண்டு.

நமது தேகத்தில் உள்ள எலும்புகள் இரு நூற்றுக்கு அதிகமா யிருக்கின்றன. அவைக ளெல்லாம் ஒன்றோடொன்று கீல்களில் அழுத் தமான நரம்புகளால் சேர்த்துக் கட்டப்பட் டிருக்கின்றன. இப்படிப்பட்ட எலும்புக் கூடு நமது சரீரத்திலிருக்கும் உறுப்புக்களை பத்திர மாய்க் காத்துக்கொண் டிருக்கிறது.

இந்த எலும்புகளெல்லாம் நமக்கு மிகுந்த உபயோகமானவை. இந்த எலும்புகள் இல்லா விடில் நமது உறுப்புக்களும் சேதப்படும். நாமும் இஷ்டப்படி அசைந்து சஞ்சரிக்க முடியாது.

நமது முன்கையிலுள்ள இரண்டு எலும்பு களும், மணிக்கட்டிலும் விரல்களிலு முள்ள எலும்புகளும் இல்லாவிட்டால் நாம் இஷ்டம் போல் விரல்களையும் கைகளையும் நீட்டவும் மடக்கவும் முடியாது. அவைகளைக் கொண்டு

ஒரு பொருளை எடுக்கவும் பிடிக்கவும் இழுக்கவும் முடியாது. இன்னும் எந்த வேலையையும் செய்ய முடியாது. இவ்விதமாக அமைந்துள்ள நமது சரீரம் ஆராய்ந்து பார்க்க நமக்கு வியப்பைத் தரும்.



## 12. கிராமச் சீர்திருத்தம்

ஒரு வீட்டுக்குரிய பல அங்கங்கள் சேர்ந்து வீடாவது போல, பல கிராமங்கள் ஒன்று சேர்ந்து ஒரு ஜில்லா வாகிறது. வீட்டுக்குரிய பல சாமான்கள் நிறைந்திருந்தால் வீடு சிறப்பாய் இருப்பதுபோல, கிராமங்கள் செவ்வையாக இருந்தால் ஜில்லாவும் சிறந்து விளங்கும். நீர் வற்றாத ஆறும் அறிவாளிகளும் இருக்கப்பெற்ற கிராமமே குடி யிருப்புக்கு ஏற்றதென்று முன்னோர் மொழிந்திருக்கிறார்கள்.

சில காலத்திற்குமுன் வரையிலும் நமது தேசத்திலுள்ள கிராமங்க ளெல்லாம் முன் சொன்னது போலவே சிறந்திருந்தன. இப்பொழுது கிராமத்திலிருந்த செல்வர்கள் யாவரும் நகரங்களுக்குக் குடியேறி விட்டார்கள். எளிய ஜனங்கள் கிராமத்தி லிருந்துகொண்டு யாதொரு தொழில் செய்வதற்கும் வழியின்றி கீழான நிலையை அடைகிறார்கள். கிராமங்களி

னுள்ள பலரும் எத்தொழிலேயும் செய்யாமல் சோம்பேறிகளாய் நாளடைவில் எளியவர்களாகிச் சீவனம் செய்வதற்கும் வழியின்றிக் கஷ்டப்படுகிறார்கள்.

சில பெரிய மனிதர்கள் ஆடம்பரமான வாழ்க்கையினுல் தமது நிலத்தையும் அடமானம் வைத்துக் கடன் வாங்கித் திருப்பிக் கொடுக்க முடியாமல் வருந்துகின்றார்கள். சிலர் தமது பிள்ளைகளைக் கல்வி கற்க பட்டணத்துக் கனுப்புவதால் தமது பிதிரார்ச்சிதமான பொருள்களை யெல்லாம் விற்றுவிட்டு எளியவர்களாகிறார்கள்.

இன்னும் சிலர் தங்களில் ஒற்றுமை யில்லாது சிறிது மன வருத்தத்தைக் கொண்டு, நியாய சபைக்குச் சென்று பணத்தை வீணே செலவு செய்கின்றார்கள். சிலர் கல்வி யறிவில்லாமையினுல் சுகாதார விஷயங்களை யறியாது தம்மை நோய்க்கு ஆளாக்கித் தவிக்கின்றனர். கல்வி யறிவில்லாததினுல் நன்னடக்கை யின்றி வருந்தி யுழல்கின்றார்கள். இவ்விதமான கஷ்டங்க ளெல்லாம் உண்டாகாமல் கிராமத்தைத் திருத்துவ தெப்படி? கிராம வாசிகளிடத்தில் கல்வியைப் பரவச்செய்வதற்கு ஒவ்வொரு கிராமத்திலும் பள்ளிக்கூடங்களை ஏற்படுத்தவேண்டும்.

சுகாதார விஷயங்களைப் பற்றி யாவருக்கும் அடிக்கடி எடுத்துரைக்க வேண்டும். நோயைப் போக்க ஒவ்வொரு கிராமத்திலும் வைத்தியசாலைகளை அமைக்க வேண்டும். ஜனங்களின் ஆடம்பரமான வீண் செலவுகளை ஒழிக்கும்படி போதிக்க வேண்டும். ஒவ்வொரு ஊரிலும் கூட்டுறவுச் சங்கங்களை ஏற்படுத்த வேண்டும். ஜனங்கள் பணக்காரர்களிடத்தில் கடன் வாங்காதிருக்கும்படி கற்பிக்க வேண்டும். அவர்களுக்கு விவசாய முதலிய தொழில்களில் ஊக்கத்தை உண்டுபண்ண வேண்டும். சோம்பலை அகற்ற முயற்சி செய்யவேண்டும்.

கிராமங்களில் ஒற்றுமையை உண்டு பண்ணி, தமது வழக்குகளைத் தாங்களே தீர்த்துக்கொள்ளும்படியாக ஒவ்வொரு கிராமத்திலும் பஞ்சாயத்தை ஏற்படுத்தவேண்டும். இப்படிச் செய்தால் கிராமவாசிகளின் குறைகளெல்லாந் தீர்ந்து அவர்கள் முன்னிலைமையை அடைவார்கள். ஜனங்கள் விருத்தியடைய கிராமமும் விருத்தியடையும். கிராம அபிவிருத்தியே தேசாபிவிருத்திக்கு முக்கிய சாதனமல்லவா ?

சில காலத்திற்கு முன் மைசூர் மகாராஜா அவர்கள் தமது பெயரால் ஒரு கிராமத்தை யுண்டுபண்ணி யிருக்கிறார்கள். அதில் பல

சாதி மக்களும் வசிப்பதற்குத் தனித்தனியாகத் தெருக்கள் இருக்கின்றன. ஒவ்வொரு வீட்டுக்கும் முன்புறமாகப் பத்து கஜம் அகலமுள்ள தெருவுண்டு. பின்புறமாக ஐந்து கஜம் அகலமுள்ள சந்துமுண்டு. ஒவ்வொரு வீடும் அறுபதடி நீளமும் நாற்பதடி அகலமுமாக அமைந்திருக்கிறது. வீட்டுக்கு வீடு இடையில் பத்து கஜம் காலியிடம் இருக்கிறது. அதனுல் காற்று, வெளிச்சம் குறைவில்லாம லிருக்கும். ஜனங்களுடைய சுகமும் விருத்தியாகும். இவ்வாறு ஜனங்களுக்கு வசிப்பதற்கு இட முதலியதுமல்லாமல், வீடு கட்டிக்கொள்வதற்கு உதவியாக நூற்றுக்கு நான்கு ரூபாய் வட்டி வீதம் மகாராஜா அவர்கள் கடன் கொடுத்திருக்கிருர்கள்.

அந்தக் கிராமத்தில் இரண்டு பள்ளிக்கூடங்கள் இருக்கின்றன. அதில் படிக்கும் சிறுவர்களுக்கு படிக்கவும் எழுதவும் கற்றுக்கொடுப்பதன்றி, நல்லொழுக்கத்தைப்பற்றியும், கைத்தொழிலைப் பற்றியும் போதிக்கிருர்கள். பயிர்த்தொழில் செய்வதற்குரிய அவசியமான பல விஷயங்களையும் அந்தப் பள்ளிக்கூடத்தில் கற்பிக்கின்ருர்கள். அந்த ஊரில் ஒரு கூட்டுறவுச் சங்கமும் அது சம்பந்தமான ஒரு பாங்கியும் உண்டு.

கிராமத்தார்கள் எல்லோரும் அந்தச் சங்கத்துக்கு அங்கத்தினராக விருக்க வேண்டும். விவசாய அபிவிருத்திக்கும், வீடு கட்டுவதற்கும், இளைப்பாறுவதற்கும், இச் சங்கம் உதவி செய்யும். அந்தக் கிராமத்தில் ஒரு பஞ்சாயத்துமுண்டு. அப் பஞ்சாயத்துச் சபையார் கிராமத்தார் வழக்குகளை யெல்லாம் விசாரித்துத் தீர்த்துவிடுவார்கள்.

அங்கு ஒரு இலவச வாசகசாலை யுண்டு. அக் கிராமத்தார் அவ் வாசகசாலைக்குச் சென்று புத்தகங்களையும், பத்திரிகைகளையும் வாங்கிப் படிப்பார்கள். சத்காலக்ஷேபத்திற்குரிய கூட்டங்களும் நடைபெறும்.

அந்தக் கிராமத்தைப் போலவே நமது நாட்டிலுள்ள கிராமங்களையும் நாம் திருத்தியமைக்கவேண்டும். அப்படிச் செய்தால் ஜனங்களின் செல்வநிலை விருத்தியாகும். நாட்டிலுள்ளவர்களும் கல்வி யறிவுடையவர்களாய், ஆரோக்கியமாக வாழ்ந்திருப்பார்கள். இவ்வாறு கிராமங்களில் எல்லாம் செல்வம் மிகுதியும் பெருகுமானால் நமது இந்து தேசம் முன்னிருந்த நிலைமையை யடைந்து சிறந்து விளங்கும் என்பதில் ஐயமில்லை.



# 13. இராஜ ராஜ சோழர்

சோழதேசத்தை ஆண்டுவந்த அரசர்களுக்குச் சோழர்கள் என்று பெயர். ஒரு காலத்தில் தஞ்சாவூர் சோழ அரசர்களுக்குத் தலைநகராக விளங்கியிருந்தது. அப்பொழுது ராஜ ராஜ சோழர் அரசு செய்து வந்தார். இவர், சிதம்பரத்தில் பொன்னினுல் சபை கட்டுவித்த சோழருடைய மரபில் தோன்றியவர்.

இவர் குடிகளிடத்தில் அதிக அன்புடையவர். பிறவுயிர்களைத் தன்னுயிர்போல் எண்ணுவார். நெறி தவருத நீதிமன்னர். நீதியான வரிகளையே குடிகளிடத்தி லிருந்து பெற்றுவந்தார். தமது நாட்டை நன்கு பரிபாலித்து வந்தார். குடிகளுக்கு யாதொரு துன்பமும் வராதபடி பாதுகாத்து வந்தார். அதனுல் சிற்றரசர்களெல்லோரும் இவர் கட்டளைப்படி நடந்து வந்தார். "மன்னன் எப்படி மன்னுயிர் அப்படி" என்பதற்கிணங்க, குடிகள் எல்லோரும் தமது அரசரிடத்தில் பேரன்புடையவர்களாய்க் கீழ்ப்படிந்து ஒழுகி வந்தார்கள். இவர் காலத்தில் களவு, கொலை முதலியன இல்லை.

இவர் தோள் வலியும் பராக்கிரமமும் உடையவர். அஞ்சாத நெஞ்சினர். இவரிடத்

தில் தேர், கரி, பரி, காலாள் என்று சொல்லப்படும் நிலப்படை அதிகமா யிருந்தது. கப்பற்படையும் ஏராளமாயிருந்தது. அதனல் பகைவர்கள் யாவரும் அவருக்கு அஞ்சி யொடுங்கி யிருந்தனர். அரசரும், இவ்விரு வகைச் சேனைகளின் உதவியைக் கொண்டு தம்முடைய நாட்டை அதிகமாகப் பரப்புதல் வேண்டுமென எண்ணினர். ஆதலால் பல சண்டைகள் செய்தார். குடகு, மைசூர் முதலிய நாடுகளையும் தமது கைவசப் படுத்தினர். மதுரையில் ஆட்சி செய்துகொண் டிருந்த பாண்டியமன்னரையும் வென்று தமது ஆணைக்குட்படுத்தினர். பிறகு சேர நாட்டையும், இலங்கைத்தீவின் வடபாகத்தையும் வென்றார். இப்படியாகச் சென்ற விடமெல்லாம் வெற்றி பெற்றார். இவருடைய சோழராச்சியம் தென்னிந்தியா முழுவதும் பரவியிருந்தது. அதனுல் இவருக்கு இராஜ ராஜ சோழர் என்ற சிறப்புப் பெயர் வழங்கலாயிற்று.

நாட்டின் செல்வ விருத்திக்குக் காரணம் வேளாண்மையே யென்பதைச் செவ்வையாக உணர்ந்தவர். ஆதலின் நமது நாட்டில் வேளாண்மைத் தொழிலை விருத்தி செய்யக் கருதி இவர் திருச்சிராப்பள்ளிக்குச் சமீபத்தில் காவிரியில் ஒரு அணை கட்டுவித்தார். அதற்குப் பெரிய அணைக்கட்டு என்று பெயர்.

இவர் தமது குடிமக்கள் யாவரிடத்திலும் வேறுபாடின்றி அன்பு செய்தது போலவே, பல மதத்தினரிடத்திலும் அன்பு பாராட்டி வந்தார். பிறமதங்களை வெறுக்க மாட்டார். எல்லா மதங்களையும் ஆதரித்து வந்தார். இவர் காலத்தில் பௌத்த மதத்தினருக்காக நாகப்பட்டினத்தில் ஒரு கோவில் கட்டப்பட்டது. இவர் பல கோவில்களைக் கட்டியிருக்கிறார். அக்கோவில்களுக்குப் பூசை முதலியன நடைபெறும் பொருட்டு ஏராளமான நிலங்களை மானியமாக உதவி யிருக்கின்றார். விலையுயர்ந்த ஆபரணங்களையும் செய்து அளித்திருக்கிறார். இவரால் கட்டப்பட்ட பல கோவில்களில் நமது தஞ்சாவூரிலிருக்கும் பெரிய கோவில் ஒன்று. அந்தக் கோயில் சுமார் ஐந்நூறடி நீளமும், இருநூறடி அகலமும் உடையது. அக் கோவிலிலுள்ள கோபுரம் சுமார் இருநூறடி உயரமானது. தென்னிந்தியாவிலுள்ள கோபுரங்கள் யாவற்றிலும் மிகவும் விநோதமானது. இக்கோவிலில் உள்ள லிங்கம் பெரியது. இக் கோவிலிலுள்ள நந்தி மிகவும் பெரியது. இவ்வரசர் கணக்கற்ற நன்மைகள் செய்து அரசு செய்த சோழர்களில் ஒருவர்.



# 14. பொருமை

முன்னொரு காலத்தில் தங்கள் ஊரை விட்டு வெளியே யாத்திரை சென்ற மூன்று பேர்கள் தற்செயலாய் வழியில் சந்தித்தனர். சிறிது தூரம் செல்வதற்குள் அம் மூவரும் ஒருவர்க்கொருவர் நண்பர்களாயினர். அவர்கள் மூன்றுபேரும் ஒருங்கு சேர்ந்து வார்த்தையாடிக்கொண்டே சிறிது தூரம் சென்றூர்கள். செல்லும் வழியில் அவர்களில் முதல்வன் மற்ற இருவர்களையும் பார்த்து "நேசர்களே! நீங்கள் உங்களது சொந்த ஊரைவிட்டு தேசாந்திரிகளாக வந்ததற்குக் காரணம் யாது?" என்று வினவினுன்.

அதற்கு இரண்டாமவன் "நேசனே! எனது ஊரிலுள்ளவர்கள் சிலரிடத்தில் மிகுந்த பகை யுண்டாயிற்று. அவர்களைக் கண்ணெடுத்துப் பார்க்கவும் எனது மனம் பொறுக்க வில்லை. அதனுல் நான் எனது ஊரைவிட்டு வந்தேன்; 'அயல் வாழ்ந்தால் ஐந்துநாள் பட்டினி' என்பது எனக்கே தகும்; யாராவது சிறிது சுகமாயிருக்கக் கண்டால் என் மனம் பொறுக்காது. அந்தப் பொருமைக்குணம் எனக்கு இயல்பாகிவிட்டது. அதற்காகவே யான் ஊரைவிட்டு வந்து விட்டேன்" என்ருன்.

அதைக் கேட்டுக்கொண்டிருந்த மூன்று மவன், "நேசனே! அப்படியானுல் நான் என்னைப் பற்றிச் சொல்ல வேண்டியதில்லை. அதே நோய்தான் என்னையும் பற்றி என்னை இக் கஷ்டத்திற்கு ஆளாக்கிற்று" என்ருன். இவ்விருவர் சொல்லையும் கேட்ட முதல்வன் "அப்படியா? என்னுயிர்த் தோழர்களே! வாருங்கள். நம்மூவரையும் ஒரே நோய்தான் பிடித்துத் துன்புறுத்துகின்றது" என்ருன். "மூர்க்கரை மூர்க்கர் முகப்பர்" என்றபடி, அவர்கள் மூவரும் ஒன்று சேர்ந்து பிரயாணம் செய்தார்கள்.

ஒருநாள் அவர்கள் வழியில் போய்க் கொண்டிருக்கையில் அவர்களுக் கெதிரில் ஒரு பணப் பை கிடந்தது. மூவரும் தாம் ஏறிச் சென்ற வண்டியை விட்டிறங்கி, அதனருகே சென்று பார்த்துப் பணமென்று தெரிந்து, அதை எடுத்து மூவரும் பங்கிட்டுக் கொண்டு வீடு சென்று சுகமாக வாழலாமென்ருர்கள். ஆனுல் மற்ற இருவரும் அதனை எடுத்துச் செல்வதற்கு அவர்களில் ஒருவருக்காவது மனமில்லை. ஆதலால் ஒருவரும் அதைத் தொடாமல் அப்படியே நின்றுகொண் டிருந்தனர். அதை விட்டுப் போவதற்கு ஒருவருக்கும் மனமுமில்லை.

இவ்வாறிருக்கையில். அந்நாட்டு அரசன் வேட்டையாடிவிட்டுத் தற்செயலாக அவ் வழியே வந்தான். வந்த அரசன் வழியில் அம் மூவர் நிற்பதையும் அவர்களருகே பணப் பை கிடப்பதையும் கண்டு அவர்களைப் பார்த்து "இங்கு ஏன் நிற்கிறீர்கள்?" என்ருன்.

அவர்கள் அவனைக் கண்டதும் நடுக்க மடைந்தார்கள். பிறகு உண்மையைச் சொல் லாவிடில் கொடிய தண்டனை கிடைக்குமென் றஞ்சி நடந்ததைச் சொல்லி, "இக் கொடிய பிணியை எவராவது போக்குவார்க ளாயின் அவர்களுக்கு இவ்வுலகில் நல்ல கீர்த்தி யுண் டாகும்; ஆயினும் நாங்கள் என் செய்வோம், எங்களால் இக் குணத்தைப் போக்க முடிய வில்லை. அதனல் வழியில் கிடக்கின்ற இந்தப் பணத்தை எடுக்க ஒருவருக்கும் மனமில்லாது மூவரும் தவித்து நிற்கிறோம்" என்றனர்.

அதைக் கேட்ட அரசன், "நல்லது, உங் கள் நோயைப் போக்க என்னிடத்தில் மருந் திருக்கிறது. நீங்கள் உங்களுக்குள்ள நோயை ஒளியாமல் உரையுங்கள்" என்ருன்.

அதைக் கேட்ட முதல்வன், "ஐயோ! எனது பொருமை நோயை நான் என்ன வென்று சொல்லுவேன்; நான் உலகத்தில் ஒருவருக்கு நன்மை செய்வதைக் கண்ணல் பார்க்கப் பொறுக்க மாட்டேன்" என்ருன்.

இரண்டாமவன் முதல்வனைப் பார்த்து, “அப்படியானால் நீ என்னைவிட யோக்கியன். நீ அயலானுக்கு உதவி செய்வதைப் பொறுக்காம லிருப்பது பெரிதல்ல; எவனாவது ஒருவன் மற்றொருவனுக்கு உதவி செய்தால் அதையும் நான் பார்க்கச் சகிக்க மாட்டேன்” என்றான்.

அதைக் கேட்ட மூன்றாமவன், “ஐயா! மற்றொருவன் எனக்கு உதவி செய்தாலும் அதை நான் பார்க்கச் சகியேன்” என்றான்.

இவற்றைக் கேட்ட அரசன் ஆச்சரியமடைந்து, ஒன்றுந் தோன்றாமல் நின்றான். பின் அரசன் தனது வேலையாட்களை யேவி அப் பணப் பையை எடுத்துவரச் செய்து, அம் மூவருக்கும் தக்க தண்டனை விதித்தான்.

அயலானுக்கு உதவி செய்து சகிக்கமாட்டாத முதல்வனை, உடுக்கத் துணியும், உண்ணச் சோறுமின்றிக் காட்டில் ஓட்டிவிட்டான்.

ஒருவர் மற்றொருவருக்கு உதவுவதைக் கூடக் காணச் சகிக்காதவன் உலகத்திலுள்ள உயிர்களுக்கெல்லாம் தீங்கிழைப்பவனாதலினால் அவன் உலகில் வசிக்கத்தக்கவ னல்லன் என்று இரண்டாமவனைச் சிரச்சேதஞ் செய்யக் கட்டளை யிட்டான். தனக்கு நன்மை செய்வதை

வெறுக்குந் தன்மை யுள்ள ஒருவனால் உலகத்திற்கு யாதொரு தீங்குமில்லை; அவன் தனக்குத் தானே தீங்கு விளைவித்துக் கொள்கிறானென்று நினைத்து அவனைப் பட்டணத்தின் நடுவில் தான தருமங்கள் மிகுதியாக நடைபெறுகிற இடத்தில் இருக்கச் செய்தான்.

அவன், பட்டணத்தில் வசிப்பவர்கள் ஒருவர்க் கொருவர் நன்மை செய்து கொள்வதையும், தனக்குத் தினமும் பலவித உபசாரங்கள் புரிவதையும் பார்த்துப் பார்த்து மனம் புண்ணாகி உயிரிழந்தான்.



## 15. எண்ணெய்

நமது நாட்டில் எள், கொட்டைமுத்து, வேர்க்கடலை, வேப்பமுத்து முதலியவைகளிலிருந்து எண்ணெய் எடுக்கிறார்கள். இவைகளில் பிராணவாயுவும், ஜலவாயுவும் கலந்திருக்கின்றன. நிலத்தி லிருந்து உட்கொள்ளும் தாதுப் பொருட்களின் சம்பந்தம் இவைகளுக்கில்லை. தாதுப் பொருள்கள் சேரவேண்டுமானால் காற்று நிலத்தோடு சேரும்படி மண்ணைக் குழைக்க வேண்டும். தேங்கிய நீர் சார்ந்து போகக்கூடிய நிலமே எண்ணெய் வித்துக்கள் பயிரிடுவதற்கு ஏற்ற நிலமாகும்.

மெழுகு வர்த்திகள், சோப்புகள் செய்வதற்கு எண்ணெய் முக்கிய ஆதாரமானது. பிண்ணுக்கை மாடுகளுக்கு உணவாகவும், நிலத்துக்கு உரமாக்வும் உபயோகப் படுத்துவார்கள். நமது நாட்டார் இப்படிப்பட்ட அருமையான வித்துக்களை விற்று அதிக லாபம் அடைதற் பொருட்டு அயல் நாடுகளுக்கு அனுப்பி விடுகிறார்கள். இவ்வாறு அனுப்பி விடுவதால் நமது நாட்டிலுள்ள பூமிசாரத்துக்குக் குறைவு ஏற்படுகிறது. பயிர்த்தொழில் செய்வோர்களுக்குத் தக்க பலன் கிடைப்பது இல்லை. இதுவே நமதுஎளிமைத்தனத்திற்குக் காரணமாகும்.

**நல்லெண்ணெய்** — எள்ளிலிருந்து எடுக்கப்படும் எண்ணெய்க்கு நல்லெண்ணெய் என்று பெயர். எள்ளில் வெள்ளை, சிவப்பு, கறுப்பு என மூன்று வகை உண்டு. சிவப்பு எள் அதிக சுவை யுடையது.

சோளம், கம்பு முதலியவற்றோடு எள்ளைக் கலந்து விதைப்பார்கள். எள்ளைத் தனியாயும் விதைப்பதுண்டு. எள் விதைக்கப்படும் நிலத்தை எவ்வளவு உழுகிறோமோ அவ்வளவுக் கவ்வளவு மண் உரமாகி எண்ணெய் விருத்தியாகும். எள்ளுக் காய் பழுத்தவுடன் வெடித்து எள் சிதறிப் போகும். ஆதலால் எள்ளின் காய்கள் முற்றினவுடனே அறுத்துவிடுவார்கள்.

எள்ளோடு வெல்லத்தையுஞ் சேர்த்துச் செக்கிலிட்டு ஆட்டுவார்கள். எள்ளினது மேற்றோலைப் போக்கிவிடில் எண்ணெய் சுத்தமாயிருக்கும். மேற்றோலோடு கூடிய எள்ளின் நெய் சிவப்பு நிறமாய்க் கசக்கும்.

எண்ணெய் பலகாரம் செய்வதற்கும் தாளிப்பதற்கும் விளக்கேற்றுவதற்கும் உபயோகிக்கப்படும். எண்ணெய் தேய்த்துக் குளிக்கும்போது, எண்ணெயைக் கண்ணில் விட்டுக் கொண்டால் கண்ணோய் வராது. வெண்மையான எள்ளினது பிண்ணாக்கு பார்ப்பதற்கு அழகாயிருக்கும்.

**விளக்கெண்ணெய் :—** கொட்டைமுத்திலிருந்து விளக்கெண்ணெய் எடுப்பார்கள். கொட்டைமுத்து ஒருவகைச் செடி. இச்செடியின் வேர்கள் நிலத்தினுள்ளே சென்று மண்ணைக் கலக்கும். அதனால் நிலத்தினது சாரத்தை அதிகமாகக் கொள்ளும்.

கொட்டைமுத்துச் செடியின் இலைகள் பழுத்து உதிர்ந்து விடும். அதுவும் நிலத்துக்குச் சாரமாகும். இந்தச் செடியின் முளையைக் கிள்ளிவிட்டால் பல கிளைகள் தோன்றும். குலைகள் கொத்துக் கொத்தாய்க் காய்க்கும். இச்செடியின் விதைகளே கொட்டைமுத்து என்று சொல்லப்படும்.

இக் கொட்டைமுத்தை இயந்திரங்களில் கொடுத்து அரைத்து எண்ணெய் எடுப்பார்கள். இக் கொட்டைகளை வறுத்து வேகவைத்தும் எண்ணெய் செய்யலாம். இந்த எண்ணெயைத் தண்ணீர் சேர்த்து நன்றாகக் காய்ச்சினால் எண்ணெய் தெளிவாக மேலே வரும். சுத்தமான விளக்கெண்ணெயைக் கண்களில் விட்டால் குளிர்ச்சி யுண்டாகும்.

**சிற்றாமணக் கெண்ணெய்** :—இந்த எண்ணெய் சிற்றாமணக்கு விதையி லிருந்து எடுக்கப்படும். சிற்றாமணக்கு என்பது ஒருவகை ஆமணக்குச் செடி. இதனைக் கொட்டைமுத்துச் செடி என்றும் சொல்வார்கள். இச் செடியின் விதை கொட்டைமுத்தைவிடக் கொஞ்சம் உருவத்தில் சிறிதா யிருக்கும். ஆதலின் இதற்குச் சிற்றாமணக்கு என்று பெயர். இவ் வெண்ணெயைத் தலையில் தேய்த்துக் குளித்தால் உடலில் இருக்கும் உஷ்ணத்தைத் தணிக்கும். இந்த எண்ணெயைச் சாப்பிட்டால் பேதியாகும். இதன் பிண்ணாக்கு நெற் பயிருக்கும் கரும்புத் தோட்டங்களுக்கும், காப்பிச் செடிகளுக்கும் சிறந்த எருவாகும்.

**கடலை யெண்ணெய்** :— கடலையிலிருந்து எடுக்கப்படும் எண்ணெய்க்குக் கடலை எண்ணெய் என்று பெயர். கடலை புன்செய் நிலத்

தில் விளையும் செடி. இதனைப் பயிர் செய்வதற்கு மணற்றரை சிறந்தது. நன்ருக விளைந்த கடலையை எடுத்து மேற்ருேலை உடைத்தெறிந்து விட்டு விதையை எடுத்து வெயிலில் உலர்த்திச் செக்கி லிட்டு ஆட்டுவார்கள்.

கடலை யெண்ணெயைச் சில தேசங்களில் பலகாரங்கள் செய்வதற்கும், விளக்கெரிக்கவும் உபயோகிக்கிருர்கள். கடலை எண்ணெயில் செய்த பலகாரங்களைத் தின்ருல் பித்தமுண்டாகும். அப்பித்தத்தைப் போக்க வெல்லத்தைச் சேர்க்கவேண்டும். கடலையையும் தின்பார்கள். கடலைச் செடி மாட்டுக்கு நல்ல உணவாகும். இதன் வேர் நிலத்துக்கு உரமாகும்.

**தேங்கா யெண்ணெய் :—** தேங்காயிலிருந்து எடுக்கப்படும் எண்ணெய்க்குத் தேங்காய் எண்ணெய் என்று பெயர். தென்னைமரத்தின் காய் தேங்காய். தென்னை மரங்கள் கடற்கரை யோரங்களில் மிகுதியாகப் பயிராகும். அங்கிருக்கும் மணலும், உப்புத் தண்ணீரும் மரத்தின் செழிப்புக்குக் காரணங்களாகும்.

தேங்காய் நெற்றுக்களைக் குழியில் வைத்துப் பூச்சி விழாமல் உப்பு சேர்த்துப் புதைப்பார்கள். மூன்று நாட்களுக்கு ஒரு முறை தண்ணீர் விட்டுக்கொண்டு வந்தால் ஆறு மாதத்தில்

முளை தோன்றும். முளைகள் சிறிது வளர்ந்த பின் அவைகளை எடுத்துச் சிறிது தூரத்துக் கொவ்வொன்ருக வைத்தால் நன்ருக வளரும். இம் மரம் ஆறு வருஷத்தில் காய்க்கும். எழுபது எண்பது வருஷங்கள் வரையிலும் பலன் தரும்.

முதிர்ந்த தேங்காய்களை ஓடு நீக்கி வெயிலில் காயவைத்துச் செக்கிலிட்டு ஆட்டுவார்கள். மலையாள தேசத்தில் தேங்காய் எண்ணெயைப் பல வேலைகளுக்கு உபயோகிக்கின்ருர்கள். இந்த எண்ணெயினுலும் மெழுகு வர்த்தி, சோப்பு முதலியன செய்கிருர்கள். தேங்காய்ப் பிண்ணுக்கு பயிருக்கு நல்ல உணவாகும்.

**வேப்பெண்ணெய்** :— வேப்ப முத்திலிருந்து எடுக்கும் எண்ணெய்க்கு வேப்பெண்ணெய் என்று பெயர். வேப்ப மரத்தின் வித்துக்கு வேப்ப முத்தென்று பெயர். வேப்ப முத்துக்களை நன்ருகக் காயவைத்துச் செக்கிலிட்டு ஆட்டுவார்கள். வேப்பெண்ணெய் மிகவும் காரமானது. இந்த எண்ணெய் தலையில் தடவவும், விளக்கேற்றவும் உபயோகப் படும். புண்களுக்குத் தடவினுல் ஈ மொய்க்காது. வேப்பம் புண்ணுக்கு காப்பிச் செடிகளுக்குச் சிறந்த எருவாகும்.

இலுப்பை எண்ணெய் :— இலுப்பை விதையைச் செக்கிலிட்டு ஆட்ட எண்ணெயுண்டாகும். இலுப்பை ஒருவகை மரம். இதன் விதையை எடுத்துக் காய வைத்துச் செக்கிலிட்டு ஆட்டுவார்கள். இவ் வெண்ணெயைச் சிலர் பலகாரங்களுக்கு உபயோகிப்பார்கள். இவ் வெண்ணெயினலும் சோப்பு முதலியவைகள் செய்யப்படும். இலுப்பைப் பிண்ணுக்கு உடம்பு தேய்த்துக்கொள்ள உபயோகப்படும்.



## 16. ஜப்பான்

ஜப்பான் என்பது ஒரு தேசம். அது நமது ஆசியாக் கண்டத்தின் கீழ்ப்பாகத்தில் இருக்கிறது. நூற்றுக் கணக்கான தேசங்கள் ஒன்று சேர்ந்தது ஜப்பான் தேசமாகும்.

ஜப்பான் என்பது ஆங்கிலச் சொல். இது ஜினவஸ் என்ற சீனவார்த்தையிலிருந்து உண்டாயிற்று. இதற்குச் சூரியன் உதயமாகுமிடம் என்பது பொருள். சுதேசிகள் ஜப்பானை நிப்பன் என்று சொல்லுவார்.

அத்தேசத்தின் விசாலம் 1,61 000 சதுர மைல். ஜனத்தொகை ஐம்பது லக்ஷம். இத் தேசம் அகலத்திலும், ஜனத்தொகையிலும்

நமது சென்னை ராஜதானியைக் காட்டிலும் கொஞ்சம் பெரியது. ஜப்பான் தேசத்தின் அகலம் இங்கிலாந்து தேசத்தின் அகலத்தில் மூன்று பங்கு அதிகம். ஜப்பான் தேசம் மலைகளடர்ந்த தேசம். ஆதலால் அங்கு விவசாயத்திற்கு வேண்டிய நிலங்கள் அதிகமில்லை.

அந்த மலைகளில் ஏராளமான எரிமலைகள் உண்டு. அவ்வெரிமலைகள் சிகரங்களிலிருந்து அவ்வப்போது மிகுந்த புகைகளையும் கரிந்த கற்களையும் வெளிப்படுத்தி பலவித நஷ்டங்களை உண்டுபண்ணும். இந்த எரிமலைகளால் பூகம்பமுண்டாகி, பலவிதமான கட்டிடங்களும் பாழாவதுண்டு. இந்த நஷ்டங்களைப் பார்த்து அங்குள்ள வீடுகளெல்லாம் ஒரு விதமாகக் கட்டப்பட்டிருக்கும்.

ஜப்பானியர்கள் மற்ற தேசத்தவர்கள் போல அதிகச் செலவிட்டு வீடுகட்ட மாட்டார்கள். அவர்கள் அத்தேசத்தில் செய்யப்படும் காகித அட்டைகளால் கதவுகளையும், சன்னல்களையும் செய்து கொள்ளுவார்கள். எல்லா வீடுகளிலும் பாய் விரித்திருக்கும். இந்துக்களைப் போலவே ஜப்பானியர்கள் செருப்புக்களை வெளியே விட்டு உள்ளே செல்வார்கள்.

இவர்களுடைய ஆசாரங்களில் சில நமக்கு அதிக ஆச்சரியமாயிருக்கும். அவர்கள் காலை.

நேரே மடக்கிக்கொண்டு உட்காருவார்கள். அவர்கள் வீட்டில் நாற்காலிகளும், கட்டில் களும் இருக்கமாட்டா. சிறிய பெஞ்சுகளை முன்னே வைத்து பாயில் இருந்துகொண்டு சாப்பிடுவார்கள். நம்மைப் போல உணவுப் பதார்த்தங்களை இலைகளில் வைக்காமல், அரக் குக் கிண்ணங்களில் வைப்பார்கள். ஆங்கி லேயர்களைப் போல ஆண்களும் பெண்களும் கலந்திருந்து உண்ணமாட்டார்கள். தீச்சட்டி களில் உணவுகளைச் சுத்தம் செய்து கொள்வார் கள். அவர்கள் முக்கியமாய்த் தேநீரைப் பரு குவார்கள். ஜப்பானியர் பசுங்கன்றுகளின் வாயைக் கட்டி பாலையெல்லாம் கறக்கமாட்டார் கள். இரவுகளில் விளக்குகள் இல்லாமல் உறங்க மாட்டார்கள். நமது தேசம் போல பிள்ளை களை இடுப்பில் எடுத்துக் கொள்ளாமல் முது கில் தொங்கவிட்டுக் கொள்வார்கள்.

வீடுகள்தோறும் ஒவ்வொரு சிறிய அறை இருக்கும். அதன் பெயர் "டோகோனேமா." அதை அவர்கள் பூசை அறையாக வைத்திருப் பார்கள். இதனால் அவர்கள் எவ்வளவு தெய்வ பக்தியுள்ளவர்கள் என்பதை ஊகிக்கலாம்.

நமது தேசத்தைப்போல கல்யாணங்க ளில் பிராமணர்கள் மந்திரம் சொல்லமாட்டார் கள். மணமக்கள், "சாஷி" என்ற ஒருவகைச்

சாராயத்தை மூன்று முறை குடிப்பார்கள். அதுதான் கல்யாணமாகும். இந்துக்களைப் போலவே அவர்களுக்கும் பண்டிகை அதிகம். அப் பண்டிகையில் அவர்கள் தங்களது வீட்டை அழகான பொம்மைகளைக் கொண்டு அலங்கரிப்பார்கள். இதுவு மன்றி, தமது சக்கரவர்த்தி படத்தையும், தலைமை அதிகாரிகளுடைய படங்களையும் வைத்திருப்பார்கள்.

ஜப்பான் தேசத்தில் புதுவருஷக் கொண்டாட்டம் ஒரு பெரிய பண்டிகையாகும். அத் தினத்தில் ஒவ்வொரு வீட்டையும் தேவதாருச் செடிகளாலும், பச்சை மூங்கிலாலும் அலங்கரிப்பார்கள். இவைகளை வைப்பது தங்களுக்கு நன்மையை விளைவிக்கும் என்பது அவர்களுடைய எண்ணம். இவைகளின் மத்தியில் புற்களைக் கட்டியிருப்பார்கள். அப் புற்களால் பேய்கள் ஓடிவிடும் என்பது அவர்களது எண்ணம். அன்று எல்லாரும் சாயத்துணிகளைத் தரித்துக்கொள்வார்கள்.

ஜப்பான் தேசத்திலுள்ள ஒவ்வொரு பையனும் ஆறு வயது முதல் பத்து வயது வரையில் பள்ளிக்கூடத்தில் படித்தே தீர வேண்டும். ஜப்பானியர் பாடசாலைகளில் வீரர்களுடைய படங்களும், சக்கரவர்த்திகளினுடைய படங்களும் வைக்கப்பட்டிருக்கும்.

சிறுவர்களுக்குச் சித்திரம் எழுதுவதில் அதிகப் பிரியமுண்டு. அவர்கள் எழுதுவதும் மிக விசித்திரமாயிருக்கும். மத்திய பாடசாலைகளில் உறக்கத்திற்குரிய விதிகளையுங் கற்பிப்பார்கள். இதனால் ஆரோக்கிய முண்டாகும் என்பது அவர்களுடைய எண்ணம்.

அவர்கள் மிகுதியும் வேலை செய்வார்கள். அவர்கள் இயந்திரங்களின் உதவியினால் துணிகள், தீப்பெட்டிகள், விளக்குச் சிமினிகள், காகிதங்கள் முதலிய பொருள்களைச் செய்து பிறதேசங்களுக்கு அனுப்பி மிகுந்த பணத்தைச் சேர்ப்பார்கள்.

அத்தேசத்தில் விவசாயத்துக்குத் தக்க நிலம் இல்லாததால் அநேகர் கைத்தொழிலைச் சிறப்பாகக் கொள்ளுகிறார்கள். அத் தேசத்தில் இரும்பும் நிலக்கரியும் மிகுதியாய்க் கிடைக்கும்.



# 17. பழமொழிகள்

## பொது

1. உற்றார் இல்லாத ஊரும் ஊரோ.
2. கைக் குருவியைக் கொண்டு காட்டுக் குருவியைப் பிடிக்கவேண்டும்.
3. அரத்தை அரங்கொண்டும், வயிரத்தை வயிரங்கொண்டும் அறுக்க வேண்டும்.
4. ஏழை அழுத கண்ணீர் கூரிய வாளை ஒக்கும்.
5. எளியாரை வலியார் அடித்தால் வலியாரைத் தெய்வம் அடிக்கும்.
6. நாயோடு சேர்ந்தாலும் நல்ல முயல் கிடைக்கும்.
7. ஏறவிட்டு ஏணியை வாங்கினாற்போல.
8. ஊர் ஓட ஒக்க ஓடு, நாடோட நடுவே ஓடு.
9. கொக்கின் தலையில் வெண்ணெய் வைத்துப் பிடிப்பதுபோல.
10. வருவது வழியில் நிற்காது.
11. ஏழையைக் கண்டால் மோழையும் பாயும்.
12. முள்ளாலே முள்ளை எடுக்கவேண்டும்.
13. கோழி மிதித்துக் குஞ்சு முடமாகுமா ?



## 18. சிந்துபாத் நாவிதன்

பாக்தாத் என்ற ஒரு பட்டணத்தில் இந்துபாத் என்ற ஒரு கூலிக்காரன் இருந்தான். அவன் விறகு விற்றுக் காலங் கழிப்பது வழக்கம். ஒருநாள் அவன் அதிக பாரமான விறகுக் கட்டைச் சுமந்துகொண்டு சென்றான். வழியில் ஒரு பெரிய மாளிகை இருந்தது. அவன் அந்த மாளிகையருகே வந்து அதன் ஓரத்தில் அச் சுமையை இறக்கி வைத்து, "கடவுளே! இவ்வளவு தரித்திரனாக என்னை ஏன் படைத்தனை? நான் என்ன தீவினை செய்தேன். இந்த அழகான மாளிகையில் வாழும் சிந்துபாத் உனக்குச் செய்த நன்மை யென்ன? அவனை அதிக செல்வமுடையவனாகப் படைத்தனையே" என்று தனக்குள்ளே சொல்லிக் கொண்டான்.

அச் சமயத்தில் சிந்துபாத் மாளிகையில் இருந்தான். அவன் இந்துபாத் சொல்லிக் கொண்டிருந்த வார்த்தைகளை யெல்லாம் கேட்டுக்கொண்டே யிருந்தான். உடனே சிந்துபாத் வெளியே வந்தான். மாளிகைவாயிலில் இருந்த இந்துபாத்தை அழைத்துக்கொண்டு போய் நன்கு உபசரித்து ஆசனத்தில் இருக்கச் செய்து தன் வரலாற்றைச் சொல்லத் தொடங்கினான்.

"நண்பனே! எனது தந்தையார் மிகுந்த செல்வமுடையவர். அவர் அளவற்ற செல்வத்தை வைத்து விட்டுச் சில ஆண்டுகளுக்கு முன்னே இறந்து போயினர். பிறகு பல தீயவர்கள் என்னை நேசித்தார்கள். அவர்களுடைய தீய பழக்கத்தால் தந்தை இறந்தபோது வைத்திருந்த அளவற்ற செல்வத்தை யெல்லாம் வீணே செலவழித்து விட்டேன்.

பிறகு சில நல்லவர்கள் என்னோடு சிநேகம் ஆனார்கள். அவர்களுடைய நல்ல பழக்கத்தால் எனக்குப் புத்தி வந்தது. மறுபடியும் இழந்த பொருள்களை யெல்லாம் சம்பாதிக்க எண்ணினேன். தீய வழியில் செலவழிந்தது போக மீதி சில நிலங்கள் இருந்தன. அந்த நிலத்தை விற்றேன். அப் பணத்தைக் கொண்டு இலாபம் தரும் சரக்குகளை வாங்கிக் கப்பலில் ஏற்றிக்கொண்டு வியாபாரத்திற்குப் புறப்பட்டேன். இரண்டு மூன்று வாரங்கள் விடாமல் கப்பலில் பிரயாணம் செய்தேன். பிறகு, சிறிது தூரத்தில் கறுப்பாக ஒரு தீவு எங்களுக்குத் தோன்றியது. நாங்கள் அத் தீவுக்குச் சென்று அதன் கரையில் கப்பலை நிறுத்தினோம். அத் தீவிலிறங்கி உணவு சமைப்பதற்காகத் தீ மூட்டினோம். சிறிது நேரத்தில் அத் தீவு அசைந்து கடலில்

மூழ்கிவிட்டது. பிற்பாடு அத் தீவு ஒரு திமிங்கிலம் என்று எங்களுக்குத் தெரிய வந்தது. முன்னதாகவே என்னுடன் வந்தவர்களெல்லாரும் கப்பலில் ஏறிவிட்டார்கள்.

நான் மாத்திரம் ஒரு மரக்கட்டையைத் தெப்பமாகக் கொண்டு இரண்டு நாள் வரையிலும் கடலில் நீந்திக் கொண்டேயிருந்து ஒரு தீவை யடைந்தேன். அப்பொழுது எனக்கு முன்னே ஒரு பெண் குதிரை காணப்பட்டது. நெடுந் தூரத்திலுள்ள ஒரு குகையிலிருந்து வந்துகொண் டிருந்த ஒரு வாலிபன் என் கண்ணுக்குத் தோன்றினன்.

அச் சமயத்தில் கடலிலிருந்து வந்த ஒரு நீர்க் குதிரை அப் பெண் குதிரையைக் கொல்லச் சென்றது. உடனே நான் விரைந்து சென்று அந்த நீர்க் குதிரையைக் கொன்று பெண் குதிரையைக் காப்பாற்றினேன். பின் அதைக் கொண்டு போய் அருகிலிருந்த பட்டணத்திலுள்ள ஒரு அரசனுக்குக் கொடுத்தேன். அவ்வரசன் அக் குதிரையைப் பெற்றுக் கொண்டு, என்னை மன மகிழ்ச்சியோடு கௌரவித்து உபசரித்தான். அவ்வூரில் சில நாள் வசித்திருந்தேன்.

பிறகு கடற் கரையில் ஒரு கப்பல் வந்திருப்பதாகக் கேள்வியுற்று, அங்குச் சென்று

பார்த்தேன். அக்கப்பலில் எனது விலாசத்துக்குச் சில சரக்குகள் வந்திருந்தன. நான் கப்பற் றலைவனைப் போய்ப் பார்த்தேன். அவன் என்னை இன்னான் என்றுணராமல் சிந்துபாத் விலாசத்துக்குச் சில சரக்குகள் இருக்கின்றன, அவற்றை விற்றுக் கொடு; அப் பணத்தைச் சிந்துபாத்துக்கு அனுப்பவேண்டு மென்றான். அப்பொழுது நான் கப்பற் றலைவனைப் பார்த்து, 'சிந்துபாத் என்பவன் நான் தான்' என்று எனது வரலாறுகளை யெல்லாம் ஆதியோடந்தமாக வெளியிட்டேன். அதைக் கேட்ட கப்பற்றலைவன் அதிக சந்தோஷத்துடன் அந்தச் சரக்குகளை யெல்லாம் என்னிடம் ஒப்பித்து விட்டான்.

நான் அதிக சந்தோஷத்துடன் அச் சரக்குகளைப் பெற்ற பின்னர், அவ்விடத்தில் சிலவற்றை விற்றேன். சிலவற்றைக் கொண்டு சென்று அவ்வூர் அரசனுக்கு வெகுமதியாகக் கொடுத்தேன். அரசன் அதைப் பெற்றதும் மிக மகிழ்ச்சியுற்று எனக்கு அளவிறந்த பொருள்களைக் கொடுத்து எனது சொந்தவூருக்குப் போகும்படி உத்தரவு தந்தான்.

நான் நமது தேசத்தில் விற்கக்கூடியவிலை யுயர்ந்த சரக்குகளை வாங்கிக் கப்பலில் ஏற்றிக் கொண்டு வீடு வந்து சேர்ந்தேன். இதுதான் எனது முதல் கப்பல் யாத்திரை" என்றான்.



# 19. சிந்துபாத் இரண்டாவது கப்பல் யாத்திரை

"நான் சில நாள் சென்றபின் மறுபடியும் பிறதேசங்களுக்குச் சென்று வியாபாரம்செய்து பொருள் தேட எண்ணினேன். ஆதலால் வியாபாரத்துக்கு வேண்டிய சரக்குகளை வாங்கிக் கப்பலில் ஏற்றிக்கொண்டு, தெரிந்த வியாபாரிகளோடு பிரயாணம் செய்தேன். சில காலம் கஷ்டமில்லாது வியாபாரம் செய்தோம். கடைசியாக மணல் இல்லாத ஒரு தீவை யடைந்தோம். அத் தீவில் இறங்கி ஏதேனும் அதிசயம் உண்டோ வென்று பார்த்துக் கொண்டே யலைந்து திரிந்ததனுல் நான் அயர்ந்து தூங்கிவிட்டேன்.

தூங்கி எழுந்தபின் பார்த்தேன். வியாபாரிகளிருந்த கப்பல் கண்ணுக்குத் தெரியவில்லை. சில தூரத்தில் ஒரு கண்டபேரண்ட பட்சி ஒரு முட்டையைக் கொத்திக்கொண்டிருந்தது. அதன் கால்கள் ஒரு பெரிய மரத்தின் அடியைப் போலக் கனமா யிருந்தன. அதைப் பார்த்ததும், அப் பறவை என்னைத் தூக்கிச் சென்று வேறிடத்தில் சேர்க்கும் என்று நம்பி அப் பறவையிடம் சென்றேன். எனது தலைப்பாகையை எடுத்து எனது இடுப்பிலும்,

அதன் காலிலும் கட்டினேன். சிறிது நேரத்தில் அப் பறவை என்னையும் தூக்கிக்கொண்டு ஆகாயத்தில் பறந்து சென்றது. அப்பொழுது இருந்த எனது நிலைமையை என்னென்றுரைப்பது?

மறுநாள் அந்தப் பறவை ஒரு மலையின் அடியில் இறங்கியது. நான் மெதுவாக எனது இடுப்பிலிருந்த துணியை அவிழ்த்துக்கொண்டேன். அப் பறவை ஒரு நல்ல பாம்பைக் கௌவிக்கொண்டு பறந்து விட்டது. என்னைச் சுற்றிலும் கண்டபேரண்டப் பறவைகளும், மலைப் பாம்புகளுமா யிருந்தன. நான் வைத்திருந்த உணவை எடுத்து உண்டேன். எனக்கு அதிகத் தூக்கம் வந்துவிட்டது. சிறிது நேரத்தில், என்னைச் சுற்றிலும் ஆலங்கட்டிகள் விழுவதுபோலக் கறித் துண்டுகள் விழுந்தன. அக் கறித் துண்டுகளை வச்சிரக் கற்கள் ஒட்டிக்கொண் டிருந்தன. நான் அவைகளைக் கண்டதும், அந்த வச்சிரக் கற்களை எடுத்து எனது பைக்குள் போட்டுக் கொண்டேன். அந்தக் கறித் துண்டுகளை எடுத்து எனது துணியில் ஒட்ட வைத்துக் கொண்டு எனது உடம்பைப் போர்த்துக் கொண்டேன். அதற்குள், ஒரு பறவை வந்து என்னைத் தசைப் பிண்டமென் றெண்ணித் தூக்கிக் கொண்டு போய்த் தன் கூட்டில் வைத்தது.

அதைக் கண்ட வியாபாரிகள், அப் பறவையைத் துரத்திவிட்டு என்னைக் கூட்டிக் கொண்டு போய்த் தங்கள் கப்பலில் ஏற்றிக் கொண்டார்கள். நான் அவர்க ளிடத்தில் எனது சமாசாரங்களை யெல்லாம் சொல்லிக் கொண்டே போனேன். கப்பலும் பாக்தாத் நகரம் வந்தடைந்தது. நான் நகரம் வந்ததும் அந்த வச்சிரக் கற்களை விற்றேன். கோடிக் கணக்கான பணம் கிடைத்தது. இவ்விதமாக நான் இரண்டாவது கப்பல் யாத்திரையைச் செய்து முடித்தேன்" என்று சொல்லி முடித்தான்.



## 20. அருச்சுனன்

பாரத வீரர்களில் புகழ்பெற்றவன் அருச்சுனன். வில் வித்தையில் அவனுக்கு ஒப்பானவர் இல்லை. அருச்சுனன், பாண்டு ராஜன் பிள்ளைகளில் மூன்றாவது பிள்ளை. இவன் இந்திரனுடைய வரத்தினால் குந்தியினிடமாகப் பிறந்தான் என்று சொல்வர். இவன் துரோணாச்சாரியிடம் வில் வித்தை கற்றுக் கொண்டான்.

ஒரு சமயத்தில் துரோணாச்சாரி தன் மாணாக்கர்களை யெல்லாம் அழைத்துத் தனக்

குக் கொடுக்க வேண்டிய தக்ஷிணையைக் கொடுப்பவர் யாவர் என்று கேட்டார். அவர் என்ன கேட்பாரோ என்று எல்லாரும் பேசாதிருந்தார்கள். அருச்சுனன் எழுந்து "நான் கொடுப்பேன்" என்றான். அதுமுதல் ஆசாரியர் அருச்சுனனுக்கு வில் வித்தையின் இரகசியங்களையெல்லாம் கற்பித்துக் கொண்டு வந்தார். வித்தைகளை யெல்லாம் கற்றுக் கொண்ட பின், அருச்சுனன் தனது குருவை வணங்கி, "சுவாமி! தங்களுக்கு என்ன தட்சணை வேண்டும்" என்று கேட்டான்.

குரு அவனைப் பார்த்து, "அருச்சுனா! முன்னொரு சமயத்தில் துருபதன் என்னை அவமானப்படுத்தியிருக்கிறான். ஆதலால் அவனைப் பிடித்துக் கொண்டுவா" என்றார். உடனே அருச்சுனன் தன் சேனையுடன் சென்று பாஞ்சால தேசத்தை முற்றுகை செய்தான்.

துருபதன் மிகுந்த வலிமை யுடையவன். அவன் கடல் போன்ற தன் நால்வகைச் சேனைகளுடன் வந்து அருச்சுனனை எதிர்த்தான். இருதிறத்துச் சேனைகளுக்கும் சிறிது நேரம் கடுமையான போர் நடந்தது. பிறகு அருச்சுனன் சிங்கக்குட்டி போல் துருபதனுடைய தேரில் குதித்து அவனைப் பிடித்துத் தன் தேர்க் காலில் கட்டிக் கொண்டு வந்து குருவினிடம் விட்டான்.

துருபதன் அந்த வீரனாகிய அருச்சுன னது பராக்கிரமத்துக்கு அதிசயித்து தனது பெண்ணை மணஞ் செய்து கொடுக்க மனதில் உறுதி செய்துகொண்டான். இதற்குள் பாண் டவர்களுக்கும் அவர்களுடைய பெரிய தகப் பன் பிள்ளைகளாகிய கௌரவர்களுக்கும் இராச்சி யங் காரணமாக மனவருத்தம் உண்டாயிற்று. கௌரவர்கள் பாண்டவர்களை அரக்கு மாளிகை யில் இருக்க வைத்துத் தீயிட்டனர். அவர்கள் அவ்வபாயத்கினின்றும் எப்படியோ தப்பித் துக் கொண்டு மாறுவேடம் தரித்துக் காலம் கழித்தனர். ஆனால் பாண்டவர்கள் அரக்கு மாளிகையில் இறந்துபோய் விட்டார்கள் என்று யாவரும் பேசிக்கொண்டனர்.

அதைக் கேட்ட துருபதன், தனது எண் ணம் நிறைவேறாமற் போய் விடுமோ என்று கவலை யடைந்து, தன் மகளுக்குச் 'சுயம்வரம் குறித்தான். அரசர்கள் யாவரும் சுயம்வரத் தின் பொருட்டுப் பஞ்சால தேசம் போய்க் கொண்டிருந்தார்கள். பாண்டவர்களும் பார்ப் பன வேடத்துடன் பாஞ்சால தேசம் சென்றார் கள். சுயம்வர மண்டபத்தில் அரசர்கள் நிறைந்திருந்தனர். ஆகாயத்தில் மச்ச இயந் திரம் சுழன்றுகொண் டிருந்தது. துருபதன் ஒரு பெரிய வில்லைக் கொண்டு வந்து வைத்து,

"இந்த வில்லை வளைத்துக் கீழே இருக்கும் தண்ணீரின் நிழலில் மச்ச இயந்திரத்தைப் பார்த்துக் கணையை எய்து, அவ் வியந்திரத்தைக் கீழே விழச் செய்பவர்களே எனது குமாரியை மணஞ் செய்து கொள்வர்" என்று சொன்னான்.

அதைக் கண்ட அரச குமாரர்கள் யாவரும் முயன்றனர். சில பேர் அவ் வில்லைத் தூக்க முடியாது போயினர். சிலர் வளைக்க முடியாது போயினர். அச்சமயத்தில் அருச்சுனன் பார்ப்பனர் கூட்டத்திலிருந்து எழுந்துவந்து, அந்த இயந்திரத்தை எளிதில் வீழ்த்தி விட்டான். துருபதன் மனமகிழ்ந்து குந்திதேவி சொல்லியபடியே பாண்டவர் ஐவர்களுக்கும் மணம் செய்து கொடுத்தான்.

கண்ணன் துவாரகைக்கு அரசன். பாண்டவர்களுக்குக் கண்ணன் அத்தை மகன். அவன் அருச்சுனனைத் தன் உயிர்போல நேசித்துத் தன் தங்கை சுமத்திரையை மணஞ்செய்து கொடுத்தான்.

ஒருநாள் அருச்சுனன் யமுனை யாற்றங் கரையில் இருக்கும்போது ஒரு கிழப் பிராமணன் வந்து "சோறு இடு" என்றான். அருச்சுனன் "இடுவேன்" என்றான். உடனே அந்தப் பிராமணன் அவனைப் பார்த்து, "நான் அக்னி

தேவன். காண்டவ வனத்தை இரையாகக் கொடு" என்று கேட்டான். காண்டவவனம் இந்திரனுடையது. அதைத் தீக்கடவுளுக்குக் கொடுத்தால் இந்திரனுடையபகையுண்டாகுமென்று அருச்சுனனுக்குத் தெரியும். ஆயினும் அவன் சொன்ன சொல்லைத் தவறாது நிறைவேற்றினான். அக்கினிதேவன் அவனுடைய வாக்குறுதிக்கு வியந்து காண்டீவம் என்ற ஒருவில்லையும், குறையாத அம்பறாத்தூணியையும், நான்கு வெள்ளைக் குதிரைகள் கட்டப்பட்டுள்ள ஒரு தேரையும் அவனுக்கு அளித்தான். அன்று முதல் அருச்சுனனுக்குப் புகழ் அதிகமாயிற்று.

சில நாட்களுக்குப் பின்னர் பாண்டவர்கள் நாற்றிசையும் வென்று புகழ்பெற்று இந்திரப் பிரஸ்தம் என்ற நகரில் வைபவமாக அரசு செய்துகொண் டிருந்தார்கள். கௌரவர்கள் அவர்களுடைய செல்வத்தைக்கண்டு பொறாமை கொண்டு வஞ்சகமான சூதாட்டத்தில் அவர்களைத் தோற்கடித்து, அவர்கள் உடுத்தியிருக்கும் துணியோடு பாண்டவர்களைக் காட்டுக்குத் துரத்தி விட்டார்கள். பாண்டவர்கள் பன்னிரண்டு வருஷம் காட்டில் வாசம் செய்து வரவேண்டுமென்றும் சொல்லி யனுப்பினர்.

பாண்டவர்கள் காட்டில் வசிக்கும்போது அருச்சுனன் பாசுபதாஸ்திரத்தைப் பெறும்

பொருட்டுத் தவம் செய்தான். அப்பொழுது பரமசிவன் அவன் முன்தோன்றி, அவனுடைய தவத்திற்கு அதிசயித்து. அவன் விரும்பிய பாசுபதாஸ்திரத்தைக் கொடுத்துச் சென்றார்.

அருச்சுனன் தேவர்களாலும் வெல்ல முடியாத காலகேயர்கள் என்ற அசுரர்களைக் கொன்று வெற்றி கொண்டான். அதைக்கண்ட இந்திரன் அருச்சுனனுக்கு முடி சூட்டினான்.

பாண்டவர்கள் விராட தேசத்தில் உருவ மாறி வசித்தனர். அப்பொழுது அருச்சுனன் பேடி ரூபமாக இருந்தான். கௌரவர்கள் பாண்டவர்களைக் கண்டு பிடிக்க எண்ணங் கொண்டு, விராட தேசத் தரசனுடைய பசு மந்தைகளை கவரத் தொடங்கினார்கள். அதைக் கண்ட அரசன் முதலியோர் சண்டைக்குப் போயிருந்தார்கள். அபபொழுது விராட ராஜனது மைந்தனான உத்தரன் மாத்திரம் நகரில் இருந்தான்.

பகைவர்கள் மற்றொரு பக்கமாக நாட்டில் புகுந்தார்கள். அதைக் கேட்ட உத்தரன் போருக்குச் செல்ல இரதத்தைச் செலுத்த வல்ல சாரதி யில்லையே என்று எண்ணி வருந்தினான். அப்பொழுது பேடியாகிய அருச்சுனன் தேர் செலுத்துவதாக இசைய, இருவ

ரும் தேரேறிச் சென்று பட்டணத்திற்கு வெளி யில் வருதலும். கடல்போன்ற பெரிய சேனை தெரிந்தது. அதைக் கண்ட உத்தரன் தேரி லிருந்து கீழே குதித்து ஓட்டம் பிடித்தான். அருச்சுனன் அவனைப் பிடித்துக்கொண்டு வந்து, தான் அருச்சுனன் என்று அவனுக் குத் தெரிவித்தலும், உத்தரன் தைரியமாக இருந்து தேர் செலுத்தினன். அருச்சுனன் பகைவர்களோடு சண்டை செய்து வென்று பசுக்களை மீட்டான்.

இவைகளை யெல்லாம் கேட்டறிந்த விரா டன் அருச்சுனனது மைந்தனாகிய அபிமன்ன னுக்குத் தன் மகளாகிய உத்தரையை மணஞ் செய்து கொடுத்தான். அபிமன்னன் அருச் சுனனுக்கும் சுமத்திரைக்கும் பிறந்தவன்.

கௌரவர்கள் சொன்னபடி காடு சென்ற பாண்டவர்கள் மீண்டு வந்து தங்களுக் குரிய நாட்டைக் கொடுக்குமாறு கேட்டார்கள். கௌர வர்கள் தாங்கள் சொன்னபடி அவர்களுக்கு நாடு கொடுக்கவில்லை. அதனல் இருதிறத் தார்களுக்கும் பதினெட்டு நாள் கொடிய சண்டை நடந்தது. பாண்டவர்கள் பாட்ட னாகிய பீஷ்மன், குருவாகிய துரோணர் முத லிய சிறந்த வீரர்கள் யாவரும் கௌரவர் பக்கம் துணையாய் இருந்து சண்டை செய்தார்கள்.

அருச்சுனன் அவர்களை எல்லாம் போரில் வென்று தன் தமையனாகிய தருமனுக்கு முடி சூட்டினான்.

அருச்சுனன் சற்குணனான சிறந்த வீர னல்லவா?



## 21. புகையிலை

புகையிலை செடியினத்தைச் சேர்ந்தது. அது மிகுதியும் புன்செய் நிலங்களில் பயி ரிடப்படும். புகையிலைச் செடி செழித்துத் தழைத்து அடர்ந்து சுமார் ஆறடி உயரம் வளரும். இதன் இலை நடுவில் பெரிய நரம் பும், பக்கங்களில் சிறிய பல நரம்புகளு முடை யதாய், சுமார் இரண்டடி நீளமும், ஓரடி அகலமு முள்ளதா யிருக்கும்.

இதன் மலர்கள் வெண்மை நிறமுடை யவையா யிருக்கும். அந்த மலர்களைக் கிள்ளி விட்டால், அவ்விடத்தில் இலைகள் உண்டா கும். இதனால் இச் செடிகளைப் பயிர் செய் வோர் இவற்றின் பூக்களை ஒடித்து விடுவார் கள். விதைக்காகச் சில பூக்களை விட்டு வைப் பார்கள். இந்தப் பூக்களிலிருந்து விதை யுண்டாகும். இந்த விதைகள் கடுகுபோலச்

சிறியதா யிருக்கும். இதன் இலைகள் முதலில் பசுமை நிறமுடையனவா யிருக்கும். முற்றிய பின் மஞ்சள் நிறமான பழுப்புக்களாய் விடும்.



இச்செடி அமெரிக்காவிலிருந்து கொண்டு வரப்பட்டதென்று சிலர் சொல்லுகின்றனர். இப்பொழுது இச்செடி வெப்பமுள்ள விடங்களிலெல்லாம் மிகுதியும் பயிராகின்றது. ஆசியாக் கண்டத்தில் இந்தியா, சீனு, ஜாவா, பாரசீகம், துருக்கி முதலிய தேசங்களில் அதிகமாகப் பயிரிடப்படுகிறது. சென்னை ராஜதானியில் மதுரை, திருச்சிராப்பள்ளி, இராமநாதபுரம் முதலிய ஜில்லாக்களிலும் மலையாளம், பாலக்காடு, சிலோன் முதலிய

இடங்களிலும் பயிரிடப்படுகிறது. ஜாவா, பிலிப்பயன் தீவிலுள்ள மணில்லா, திருச்சி ராப்பள்ளி, திண்டுக்கல், சிவகிரி முதலிய விடங்களில் விளையும் புகையிலைகளே யுயர்ந்தனவாகப் பாராட்டப்படுகின்றன.

பெரும்பாலும் இச் செடி உவர் கலந்த கரிசல் மண்ணிலும், செம்மண்ணிலும் நன்ருக விளையும். இதைப் பயிர் செய்வதற்குப் புன்செய் நிலத்தை நன்ருக உழுது சுத்தி செய்யவேண்டும்.

நிலத்தைச் சமப்படுத்தி வரிசை வரிசையாகப் பாத்தி கட்டவேண்டும். பின் விதைகளைத் தெளித்துத் தண்ணீர் பாய்ச்சுவார்கள். நாலைந்து தினங்களில் அவ் விதை முளைத்துக் கிளம்பும். பிறகு அவை செழித்து அடர்ந்து வளரும். அப்போது களைகளைப் பிடுங்கி யெறிவர். நன்ருய் வளரும்போது பூச்சி முதலிய வற்ருல் நோய் முதலியன வராமல் பாதுகாக்க வேண்டும்.

புகையிலைச் செடிகள் பூத்தபின், விதைக்கென்று விடப்பட்ட செடிகள் தவிர, மற்ற பூக்களைக் கிள்ளி விடுவார்கள். இலைகள் நன்ருய்ப் பல விடங்களிலும் முளைக்கும். இலைகளுக்கும் நல்ல மணமுண்டாகும். இலைகள் முதிர்ந்து பழுத்து விடும். அதைக் கண்ட

தும் பயிரிடுவோர் அச் செடிகளை அடியோடு வெட்டி, ஓரிடத்தில் இரண்டொரு நாள் போட்டு வைப்பார்கள். பிறகு அவற்றை இள வெயிலில் உலர்த்தி, இலைகளை அறுத்துக் காம்புகளை ஒன்று சேர்த்துக் கட்டிப் பதனிடு வார்கள். பிறகு அவ்விலைகள் கருநிறமுள்ள வைகளா யிருக்கும். அதன் பின்னர்தான் அது உபயோகப்படுத்தப்படும்.

புகையிலை மயக்கந் தரும். ஆயினும் உலகத்திலுள்ள மனிதர்களிற் பெரும்பாலோர் இதனைப் பலவகையாக உபயோகப் படுத்து கின்றனர். நமது நாட்டில் இவ்விலையைப் பக்குவப்படுத்திப் பொடியாகவும், சுருட்டாக வும் உபயோகிக்கின்றனர். சிலர் வெற்றிலைப் பாக்குடன் புகையிலையை வாயில் அடக்கிக் கொள்ளுகின்றனர். வாசனைப் பொருட்களை யும் சேர்த்து இப் புகையிலையை உபயோகப் படுத்துவார்கள். வியாபாரமும் செய்கின்றனர். இப் புகையிலை தேசத்திற்குத் தக்கவாறு பல வகையில் உபயோகப் படுத்தப்படுகின்றது. இதனை எப்படி உபயோகப் படுத்தினாலும் கெடுதியே உண்டாகும்.



# 22. கண்ணகி

சோழ நாட்டின் தலை நகரமாகிய காவிரிப் பூம் பட்டினத்தில் மாசாத்துவான் என்னும் பெயருடைய வணிகன் ஒருவன் இருந்தான். அவன் திரண்ட செல்வமுடையவன். அவனுக்குக் கோவலன் என்ற ஒரு புதல்வன் இருந்தான். கோவலன் கண்ணகியை மணஞ் செய்துகொண்டான். கண்ணகி திருவினும் மிக்க உருவுடையவள். கற்புக்கரசியாக விளங்கினாள். கண்ணகியும் கோவலனும் ஒருமனப் பட்டு இல்லறத்தைச் செவ்வையாக இனிது நடத்தி வந்தார்கள்.

இவ்வாறிருக்கையில் கோவலன் சில தீயருடைய நேசத்தினால் தீய வழியில் சென்றான். பல தீச்செயல்களைச் செய்யத் தொடங்கினான். தன் முன்னோர் தேடிய பொருள்களை யெல்லாம் வீணில் செலவு செய்தான். தனது வீட்டையும் மறந்தான். தனது அன்புடைய மனையாளையும் அறவே மறந்தான். தனது பொருளை யெல்லாம் இழந்து வறுமை யுற்றான். அவனைச் சூழ்ந்திருந்த தீய சிநேகிதர்கள் எல்லோரும் அவனை விட்டு நீங்கினர். கோவலன் தனது பொருளை இழந்ததையும், தனது நண்பர்கள் அனைவரும் தன்னை விட்டு

நீங்கியதையும் நினைத்து வருந்தினான். கடைசியாகத் தன் வீடடைந்தான்.

இவைகளைக் கண்ட கண்ணகி மிகுதியும் வருந்தினாள். ஆயினும் தனது வருத்தத்தை வெளிக்குக் காட்டிக் கொள்ளவில்லை. கற்பொழுக்கம் தவறாத கண்ணகி எப்பொழுதும் போலவே கணவனிடத்தில் அன்பு மாறாதிருந்தாள். தன் கணவன் எப்பொழுது நல்ல வழிக்குத் திரும்புவான் என்ற கவலையே கொண்டிருந்தாள்.

கணவன் வருத்தத்துடன் வந்ததைக் கண்ட கண்ணகி அவனை யணுகி, "நாதா! ஏன் வருந்துகின்றீர்கள். இவைகளெல்லாம் கால வித்தியாசத்தால் உண்டாயின. தாங்கள் ஒன்றுக்கும் அஞ்ச வேண்டாம். என்னிடத்தில் விலை மதிக்கப் பெறாத காற் சிலம்புகள் இருக்கின்றன. அவற்றை விற்றுக் கிடைக்கும் பொருளைக் கொண்டு வியாபாரஞ் செய்து பொருளைத் தேடலாம்" என்றுரைத்துத் தேற்றித் தனது சிலம்புகளில் ஒன்றைத் தந்தாள்.

அச் சிலம்பைப் பெற்ற கோவலன் மதுரைக்குச் சென்று பொருள் சம்பாதிக்க வெண்ணி, கண்ணகியையும் அழைத்துக் கொண்டு மதுரை சேர்ந்தான். மதுரையில் இடைச் சேரியில் இருந்த மாதரி என்னும்

ஓர் ஆயர்குல மாதின் வீட்டில் கண்ணகியை இருக்கவைத்துக் கோவலன் சிலம்பை விற்ப தன் பொருட்டுக் கடை வீதிக்குப் புறப்பட் டான். போகும் வழியில் வஞ்சிப்பத்தன் என்ற ஒரு தட்டானிடம் சிலம்பைக் காட்டி விலை கூறினன்.

அத் தட்டான், அந்நகரை யாண்ட பாண் டிய மன்னவனுடைய அரசியின் காற்சிலம்பு களில் ஒன்றைத் திருடியவன். ஆதலால் அந்தத் தட்டான் தான் தப்பித்துக்கொள்ளத் தக்க சமயம் கிடைத்த தென்றெண்ணி, கோவ லனை ஓரிடத்தில் இருக்கவைத்து விட்டு அரச னிடம் சென்ருன். "அரசே! தங்கள் அரண் மனையில் திருட்டுப்போன காற்சிலம்பைத் திரு டிய கள்வன் அகப்பட்டுவிட்டான்" என்ருன். அரசனும் ஒன்றையும் ஆராய்ச்சி செய்யாமல் காவலர்களை அழைத்து, "சிலம்பு திருடிய கள் வனைப் பிடித்துச் சிரச்சேதம் செய்து அச் சிலம்பைக் கொண்டுவாருங்கள்" என்று கட் டளையிட்டான். காவலர்களும் சென்று கோவ லனைப் பிடித்து கொலை செய்துவிட்டார்கள்.

கோவலன் கொலையுண்டதைக் கேட்ட கண்ணகி ஆருத்துயரமுற்று அழுதுகொண்டு பாண்டியனது அரண்மனை சென்ருள். பாண் டியனிடம் நடந்ததைச் சொன்னுள். கோவ

லன் கள்வன் அல்லன், அவன் தன் நாயகன் என்றும், அவன் தனது ஒற்றைச் சிலம்பை விற்கவந்தவன் என்றும், அவனுக்கு எடுத்துக் கூறினுள். அதைக்கேட்ட வேந்தன் தனது அறிவீனத்துக்கு இரங்கி, ஏங்கித் தனது ஆருயிர் விட்டான். பின் கண்ணகி தனது கற்பின் மகிமையால் மதுரையை எரித்து விட்டுச் சேர நாடடைந்து தெய்வ வடிவத்தோடு வந்த தன் கணவனுடன் சுவர்க்கத்தை அடைந்தாள்.

இவ்வரலாற்றைக் கேட்டறிந்த சேர நாட்டரசனை செங்குட்டுவன் கண்ணகிக்குக் கோயில் கட்டி விழாக் கொண்டாடினன். நமது கற்புக் கருங்கலமாகிய கண்ணகி தெய்வமாகப் பாராட்டப்பட்டு சிறப்புற்று விளங்குகிருள்.



## 23. நல்ல பழக்கங்கள்

நாம் வசிக்கும் நாட்டில் வாழ்ந்த நமது முன்னேர்களெல்லாம் நெடுங்காலம் பிணியின்றி வாழ்ந்திருந்தார்கள். அவர்கள் அவ்வாறு சுகமாக வாழ்வதற்குச் சில பழக்க வழக்கங்களைக் கையாண்டு வந்தார்கள். அவ்வித பழக்கங்களை நாமும் கையாண்டு வந்தால் சுகத்

தைப் பெறலாம். பிள்ளைகளே! சரீர சுகத்திற்கு மேற்பட்ட செல்வம் இல்லையல்லவா?

நாம் விடியற்காலத்தில் படுக்கையைவிட்டு எழுந்திருப்பது நல்ல பழக்கமென்று பெரியோர்கள் சொல்லுவார்கள். சூரியோதயத்திற்கு முன் ஐந்து நாழிகை இருக்கும் காலம் விடியற்காலமாகும். அக்காலத்தில் உலகம் சத்தமின்றி இருக்கும். அதனால் அந்நேரத்தில் மனது சமாதானமாக விருக்கும். ஆதலால் கடவுளைத் தியானிக்கவும், பாடங்களைப் படிக்கவும் அன்று புதிதாய்ச் செய்யவேண்டிய காரியங்களைப் பற்றி ஆலோசிக்கவும் அக்காலமே ஏற்ற காலமாகும்.

பொழுது விடிவதற்குமுன் இரண்டு நாழிகைப்போதில் படுக்கையிலிருந்து எழுந்திருக்க வேண்டுமென்பது சிலரது கொள்கை. இரண்டரை நாழிகை கொண்டது ஒரு மணி நேரமாகும்.

படுக்கையை விட்டு எழுந்தவுடன் சிறிது நேரம் கடவுளைத் தியானிக்க வேண்டும். பிறகு, ஊருக்கு வெளியே சென்று காலைக்கடனை முடித்துக் கொள்ளவேண்டும். நல்ல காற்றோட்டமான இடங்களில் வசித்தால் நமது உடம்பிலுள்ள உறுப்புக்களுக்கு நல்ல சுகம் உண்டாகும். நல்ல காற்று நமது சுவாசக் கருவிகளில்

பிரவேசித்து இரத்தத்தை வேகமாய் ஓடச் செய்யும். அதனால் உடம்பு புஷ்டியாகும்.

பல் துலக்குவதைப்பற்றி நமது முன்னோர்கள் அதிகமாகச் சொல்லியிருக்கிறார்கள். பல் துலக்குவதற்கு வேப்பு, வேல், மருதோன்றி, அத்தி இந்த மரங்களின் குச்சிகள் தகுந்தவை. இந்தக் குச்சிகள் ஈரமாகவும், காய்ந்ததாகவும் இருக்கலாம். அதன் ஒரு பாகத்தை மெல்ல மிருதுவாக்கிப் பல்லைத் துலக்கவேண்டும். அக்குச்சிகளின் மிருதுவான பாகம் பல் வரிசைகளிலுள்ள அழுக்கைப் போக்கிவிடும்.

பல் வெண்மையாகச் சுத்தமாகும் வரையில், எல்லாப் பாகத்திலும் தேய்த்து விளக்க வேண்டும். உண்ட பிறகு வாயைக் கொப்பளித்தல் வேண்டும். அவ்வாறு செய்வதால் பற்கள் சிறிது சுத்தப்படும். அதனாலேயே பற்களின் சந்துகளிலுள்ள பதார்த்தங்கள் வெளிக்கு வந்து விடாது. இதனால் காலையிலும், உணவு உண்டபின்னும், பல் துலக்க வேண்டும். சந்துகளில் பதார்த்தங்களிருந்தால் அவை அழுகிப் போய்த் துர் நாற்றம் வீசும். இந்த அழுக்குள் பற்களைக் கெடுத்து விடும்.

சுத்தமில்லாத உடைகள் பலவித நோய்களுக்குக் காரணமாகும். பிள்ளைகளிற் சிலர்

நோயால் வருந்துகின்ருர்கள். அதற்குக் காரணம் அவர்கள் அசுத்தமான உடைகளை உடுப்பதேயாகும். ஆதலால் பிள்ளைகள் தினமும் நீராடவேண்டும். தமது ஆடைகளைத் துவைத்துக் கட்டவேண்டும். சுத்தமான ஆடைகளை உடுக்கவேண்டும்.

சூரியோதயத்திற்கு முன் ஓடும் நீரில் குளிப்பது பெரியவர்களது வழக்கம். தண்ணீரில் குளிப்பது உடம்புக்கு ஆரோக்கியத்தைத் தரும். சாதாரணமாக குளம் கிணறுகளில் குளிப்பதைவிட, ஓடும் நீரில் குளிப்பது சிறந்ததாகும். ஏனெனில் ஓடும் நீரில் பிராணவாயு கலந்திருக்கும்.

நமது உடம்பிலிருக்கும் அழுக்கு நாளுக்கு நாள் அதிகமாகிக்கொண்டே யிருக்கும். ஆதலால் காலைப்பொழுதிலேயே அழுக்குப் போகத் தேய்த்துக் குளித்து உடம்பைச் சுத்தி செய்து கொள்ளவேண்டும்.

தண்ணீரில் குளிக்க முடியாதபோது வெந்நீரில் குளிக்கலாம்.

பிள்ளைகளே! நீங்கள் எல்லோரும் இப்பழக்கங்களைக் கையாண்டு வருவீர்களாகுல் நோயின்றி நெடுங்காலம் சுகமாக வாழ்வீர்கள்.

'நோயற்ற வாழ்வே குறைவற்ற செல்வம்'



# 24. பணம்

நமது நாட்டில் யாவரும் பணத்தைச் செல்வமெனவும், திரவியமெனவும் வழங்கி வருகின்றார்கள். அவ்வாறு வழங்கி வருவதற்குக் காரண மென்ன ?

நினைத்த பொழுதெல்லாம் பணமாக மாற்றக்கூடிய விலையுயர்ந்த உலோகங்களை மாத்திரமே நம்மவர்கள் செல்வமென மதித்திருந்தார்கள். மற்றவைகளை யெல்லாம் செல்வமாக நினையாதிருந்தார்கள். ஆதலால் பொன்னையும் வெள்ளியையும் கட்டி கட்டியாய்ச் சேர்த்து வைக்கின்ற தேசங்களே செல்வப்பெருக்குடைய தேசங்கள் என்றும், விலையுயர்ந்த உலோகங்களை வெளித் தேசங்களுக்கு அனுப்பும் தேசமனைத்தும் எளிமையுடையன வென்றும் எண்ணியிருந்தார்கள். மற்றும் பொற்கனிகள் இல்லாத தேசத்திற்குச் செல்வமுண்டாகும் வழி, பிறதேசங்களோடு வாணிபம் செய்து சம்பாதிப்பதே யென்றும் நினைத்திருந்தார்கள்.

இவ்வகையாக உலகத்தில் நடக்கும் வியாபாரத் தொழிலெல்லாம் பொன் வெள்ளி முதலிய நாணயங்களைப் பெருக்குவதிலேயே நோக்கமுடையனவாய், ஒரு தேசத்தார் மற்றொரு

தேசத்தாருடன் போட்டி போட்டுக்கொண்டு செய்யுந் தொழில்களாகவே யிருந்து வந்தன. இவ்வித போட்டியினுல் ஒரு தேசத்தார் மற்ற தேசத்தார்களை நஷ்டப்படுத்தியும், தக்க ஊதியம் கிடைக்காதபடி தடுத்தும் வந்தனர்.

ஒருகாலத்தில் உலகத்திலுள்ள மக்களனை வருக்கும் இப்படிப்பட்ட எண்ணமுண்டாகி, மற்ற தேசங்களின் முன்னேற்றத்தைக் கெடுப்பதற்குக் காரணமாயிருந்தும் வந்தனர்.

இதைக் கண்ட அறிவாளிகள் யாவரும் ஒன்றுகூடிச் செல்வம் என்பது யாதென்று, ஆராயத் தொடங்கினர். அவ்வாறு ஆராய்ந்து கடைசியாகச் செல்வமும் மற்ற பொருள்களைப் போலவே பண்ட மாற்றலுக்கு ஏற்ற ஒரு விலைப்பொருளென்று கண்டறிந்தார்கள். எவ்வளவு உபயோகமுள்ள பொருளாயிருந்தாலும் மாற்றி மற்றொரு பொருள் கொள்வதற்குப் பயன்படாதாயின், அப் பொருள் செல்வமன்று. உதாரணமாக: காற்று நம்மெல்லோருக்கும் இன்றியமையாத பொருளல்லவா? ஆனுலும், அது நமக்கு எளிதாய்க் கிடைக்கின்றது. ஆதலால் அதற்குக் கடைசியில் கொள்ளத்தக்க விலையில்லை. அதைச் சேர்த்து வைப்பதும் வீண். ஆகையால் காற்று செல்வமாகாது.

பணம் பணமாகவே யிருந்தால் என்ன பயன்? அது ஒரு விருப்பத்தையும் தணிக்காது. அதையறியாமல் பணமே செல்வமென மயங்குவது, நமது வீட்டுக்குக் கொண்டுபோய்விடுகிற பெரும் பாதையைப் பார்த்து, அதுவே வீடு என மயங்குவது போலாகும். ஆயின் பணம் என்றால் என்ன? விலை மதிப்பதற்கு ஒரு அளவாயும், பண்டமாற்றுக்குப் பொதுப் பொருளாயும் இருப்பதே பணமாகும்.

பணம் விலைமதிப்புக்குப் பொதுவான அளவையென்றபோது, பொருள்களின் விலை மதிப்புக்குப் பொதுவான அளவையாகக் கொள்ளப்பட்ட பொருள்களெல்லாம் பணம் என்பதாயிற்றல்லவா? அப்பொருள் பொன் வெள்ளிகளாய் இருக்கவேண்டுமென்பதில்லை. காகிதத்தையாயினும் அல்லது வேறு எந்தப் பொருளையாயினும் விலைமதிப்புக்கு அளவுப் பொருள்களாய்த் தேர்ந்தெடுத்துக் கொள்ளலாம்.

நமது தேசத்தில் பொன்னினாலும், வெள்ளியாலும், செம்பாலும் செய்யப்பட்ட நாணயங்கள் வழங்கி வருகின்றன. இவைகளும் போதாமல் கடுதாசியில் அரசர் முத்திரையிட்ட நோட்டுகளும் வழங்கப்பட்டு வருகின்றன.

# 25. குடியினால் விளையும் தீமைகள்

நமது நாட்டிலுள்ள அறிவில்லாத கீழ் மக்களிற் சிலர்கள், சாராயம் முதலிய மயக்கந் தரும் பொருள்களை உபயோகிக்கின்றார்கள். வருந்திப் பாடுபடுபவர்களும் இவற்றை உபயோகிக்கின்றார்கள். இவர்கள் குடிகாரர்கள் என்று இகழப்படுகின்றார்கள்.

இத் தீய பழக்கம் மனிதர்களுடைய அறிவை மயக்கி, அவர்களுக்குப் பல தீங்குகளை விளைவிக்கும். மனிதர்கள் செய்யத்தகாத தீய செயல்களில் இதுவுமொன்று. இத்தீய பழக்கமுள்ளவர்கள் இது நல்லது, இது தீயதென்று எண்ணமாட்டார்கள். அவர்கள் செய்யக்கூடாத தீயசெயல்கள் உலகில் ஒன்றும் இரா. மதுபானம் செய்பவர்கள் கொலை, களவு சூது முதலிய எல்லாத் தீயசெயல்களையும் துணிவாகச் செய்வார்கள். அவர்கள் ஒன்றுக்கும் அஞ்சமாட்டார்கள்.

கள் முதலிய லாகிரிப் பொருட்கள் தன்னைப் பருகியவர்களுக்கு விரைவில் மயக்கத்தையுண்டுபண்ணும். அறிவை இழக்கச் செய்யும். ஆதலின் குடித்தவர்கள் சிறிது நேரத்திற்குள் தமது அறிவை இழந்துவிடுவார்கள்.

அறிவை யிழக்கவே, நல்லது கெட்டது என்று உணரார். அவர்கள் எதையும் மனம் போன படி செய்வார்கள்.

குடியர்கள் தமது ஜீவனத்துக்கான தொழிலைச் செவ்வையாகச் செய்யமாட்டார்கள். வருமானத்துக்கு வழியில்லாது போகும். கையிலுள்ள பொருள்களையும் செலவு செய்து குடித்து விடுவார்கள். தமது சிநேகிதர்களுக்கும் வாங்கிக் கொடுப்பார்கள். தாங்களும் குடிப்பார்கள். இப்பழக்கம் நாளுக்கு நாள் அதிகரிக்கவே, கையிலுள்ள பொருளும் விரைவில் அழிந்துவிடும். பிறகு தமது வீடுகளிலுள்ள தட்டுமுட்டுச் சாமான்களையும், வீடுவாசல் முதலிய பொருள்களையும் ஈடுவைத்தும், விற்றும் செலவு செய்வார்கள்.

தமது பிள்ளைகளுக்குப் போடப்பட்டிருக்கும் நகைகளையும் இரக்கமில்லாது கழற்றிக் கொண்டுபோய் விற்றுக் குடிப்பார்கள். முடிவில் ஒரு சிலர் தமது மனைவியின் கழுத்திலிருக்கும் தாலியையும் கழற்றி விற்றுக் குடித்து விடுவார்கள். இதனாலேயே "குடி குடியைக் கெடுக்கும்" என்ற பழமொழி வழங்கி வருகிறது.

இவ்வாறு சில நாட்களுக்குள் கையில் ஒன்றுமில்லாது போகவே, தாம் உடுத்தும் உடையையும் அடகுவைத்தும், விற்றும்வாங்கிக்

குடிப்பார்கள். பிறகு பணம் சம்பாதிப்பதற்கு ஆசைகொண்டு சூதாடுவார்கள். அச் சூதாட்டத்தில் மேலும் மேலும் பொருள் வருவது போலத் தோன்றி உள்ளதும் கையைவிட்டு நீங்கிவிடும். கையிலுள்ள சிறிதளவு பொருளும் நீங்கிவிடவே, திருடியாவது பொருள் தேட விரும்புவார்கள். அவ்வாறு திருடுகையில், தாங்கள் உயிர் தப்பிக்கொள்ளவேண்டிச் சில சமயங்களில் கொலையும் செய்வார்கள். திருட்டுவெளிப்பட்டுவிட்டாலோ சிறையும் புகுவார்கள்.

இம்மட்டோ ? அறிவு மயங்கி உளறுவார்கள். வாயில் வந்தவைகளையெல்லாம் சொல்லிப் பாடுவார்கள். வழியில் வீண் சண்டை யிழுப்பார்கள். தாமே புலம்புவார்கள். கல்லென்றும் முள்ளென்றும் பாரார்கள். கண்ட விட மெல்லாம் கீழே விழுந்து புரண்டு மெய் சோர்ந்து கிடப்பார்கள். அவர்கள் கீழே விழுவதனால் பல காயங்கள் உண்டாகும். மடியிலிருக்கும் பணங்களையும் உதறிவிடுவார்கள். சில சமயங்களில் அவை காணாமலும் போகும். அதிகாரிகளால் அடிக்கப்படுவார்கள். யாவராலும் துன்புறுத்தப்படுவார்கள். வீட்டுக்குச் சென்றால் தாய் என்றும் தந்தை யென்றும், தாரமென்றும் பாரார். பிள்ளைகள் என்றும் சிந்திக்க மாட்டார்கள். யாவரையும் திட்டுவார்கள். அடிப்பார்கள். முறைதவறித் திட்டுவார்கள்.

இவர்கள் தமது குடிவெறியால் செய்யப்பட்ட இழி தொழில்களைக் குடி நீங்கிய பிற்பாடு உணரமாட்டார்கள். பிறர் அவற்றை அவர்களுக் கெடுத்துரைத்து அறிவு புகட்டினுலும் குடியைவிடத் துணியார். பிறகு குடிக்கும் நேரம் வந்ததும், எவ்வகையிலாவது குடிக்க வகைதேடுவார்கள். கையில் பொருள் இல்லாவிடினும், தகுதியற்ற எச்செயலைச் செய்தும் பொருள்தேட முயலுவர்.

இதனுல் குடிப்பவர்கள் தகுதியற்ற எச்செயலையும் செய்வார்கள் என்பது விளங்குகின்றதல்லவா? குடிப்பவர்கள் எப்பொழுதும் ஈடேற மாட்டார்கள் வறுமை அவர்களை விட்டு நீங்காது. குடியினுல் எத்தனையோ குடிகள் அழிந்து போயின.

ஆதலால் நாம் இத்தகுதியற்ற தீய பழக்கத்தைக் கொள்ளலாகாது. இக் கொடிய பழக்கமுள்ளவரோடும் வார்த்தையாடலாகாது. அவர்களது நேசமும் பெருங்கேட்டை விளைவிக்கும். அப்படிப்பட்டவர்களைக் கண்டால், அப் பழக்கத்தை விட்டு விடும்படி அவர்களுக்கு நாளடைவில் நல்லறிவு புகட்ட வேண்டும்.

'கள்ளும் களவும் கொலையும் தவிர்'



## 26. இராமர் அசுவமேதயாகம்

[சில முனி குமாரர்களோடு லவன் பிரவேசிக்கிறன்.]

**லவன்** — சிநேகிதர்களே ! இந்த வனத்தில் கால்வைத்தது முதல் என் மனம் மகிழ்கின்றது ; காரணம் என்னமோ ?

**முனிகுமாரன்** — ஆம், ஆம்; நாம் ஒவ்வொரு நாளும் இவ்வனத்தைப் பார்த்துக்கொண்டிருந்தாலும், இன்று இது மிகவும் அழகாகத்தான் விளங்குகின்றது.

**மற்ருெருவன்** — இம்மாதம் சித்திரை மாதமல்லவா ? இந்த வசந்த காலத்தில் மரங்களெல்லாம் செழித்துத் தழைத்துப் பூத்திருக்கின்றன. ஆதலால் அதிக அழகாயிருக்கிறது.

**இன்னெருவன்** — நடுப்பகலாகிவிட்டது. இன்னும் விளையாடிக் கொண்டிருப்பது தகுதியன்று. நாம் நமது இருப்பிடத்தை விட்டு அதிகதூரம் வந்துவிட்டோம்.

[தூரத்தில் ஒரு சத்தம் கேட்கிறது எல்லோரும் பார்க்கிருர்கள்].

**முனிகுமாரன்** — அதோ ஒரு குதிரை நமது பக்கமாக வருகின்றது.

**லவன்** — ஆகா! இந்தக் குதிரை என்ன அழகா யிருக்கின்றது! இது யாருடை யதோ, நண்பா! இதைப் பிடித்து நாம் சவாரி செய்யலாமா?

**முனிகுமாரன்** — போதும் போதும். குதிரையின் கிட்டச் சென்ருல் கடிக்கும். பேசாது இரும்.

**லவன்** — இதோ நான் சென்று அக்குதிரையைப் பிடித்துக்கொண்டு வருகின்றேன். நீங்க ளெல்லோரும் இங்கே யிருங்கள்.

**முனிகுமாரன்** — அதோ, அக்குதிரை அதிக அலங்காரத்துடன் நெற்றியில் ஒரு பட்டமும் தரித்து வருகின்றது. இது யாகஞ் செய்வதற்கு விடுத்த குதிரையாக வேண்டும். அதன் பின்ஞல் திரண்ட சேனே வருகின்றது பார்த்தனேயா? ஆதலால் அந்தக் குதிரை அரசனுடைய குதிரை யாகவேண்டும்.

**லவன்** — தைரியம் இல்லாத நீங்கள் இங்கே யிருங்கள். நான் சென்று பார்த்து வருகின்றேன்.

[நெற்றிப் பட்டத்துடன் அக் குதிரை வந்தது. லவன் அக்குதிரையின் பட்டத்தைப் படித்துப் பார்த்து "வீரர்கள்

யாவரா யிருப்பினும் குதிரையைப் பிடித்துக் கோள்ளலாம்:'' "தன்னை ஒருவரும் வேல்ல முடியாது'' என்று எழுதியிருந்ததைக் கண்டவுடனே, கோபங் கோண்டு அக்குதிரையைப் பிடித்து ஒரு மரத்தில் கட்டிவிட்டான் ]

**முனிகுமாரன்** — லவனது மூர்க்க குணத்தால் நமக்கும் கஷ்டம் வரும்.

**சத்துருக்கன்** — "அரக்கர்களை யெல்லாம் ஒரு நொடிப் பொழுதில் கொன்று வெற்றி பெற்ற இராமனுடைய அசுவமேதக் குதிரையைப் பிடித்தவனை இப்பொழுதே அடக்கி விடுகின்றேன்'' என்று தனக்குள்ளே சொல்லிக்கொண்டு, முனிகுமாரர்களைப் பார்த்து, "பிள்ளைகளே! இக்குதிரையைப் பிடித்துக் கட்டினவன் யாவன்?'' என்றான்.

**முனிகுமாரன்** — (அச்சத்துடன்) ஐயா! நாங்கள் கட்டவில்லை.

**சத்துருக்கன்** — நீங்களில்லாவிட்டால் அதைக் கட்டினவனைச் சொல்லுங்கள்.

**முனிகுமாரன்** — ஐயா! லவகுமாரா! எங்கள் சொல்லைக் கேளாமல் இவ்வளவு கஷ்டங்களை உண்டுபண்ணிவிட்டாயே.

**லவன்** — (அவர்களது அச்சத்தைப் பார்த்து) நீங்கள் பயப்படாதீர்கள்.

**சத்துருக்கன்** — (லவனைப் பார்த்து, "ஆகா! இவன் என்ன அழகுடன் விளங்குகின்றான்! இவனது சரீரம் எவ்வளவு திடமா யிருக்கிறது!" என்று எண்ணிக் கொண்டு, லவனைப் பார்த்து) பிள்ளாய்! இந்தக் குதிரையை ஏன் பிடித்துக் கட்டி வைத்தாய்?

**லவன்** — கட்டவேண்டு மென்று நினைத்தே பிடித்துக் கட்டிவைத்தேன்.

**சத்துருக்கன்** — வீரர்களா யிருப்போர்தான் இக் குதிரையைப் பிடிப்பார்கள். சிறு பிள்ளையாகிய நீ பிடிக்கலாமா?

**லவன்** — வீரர்களுக்குச் சிறியார் பெரியார் என்ற வேறுபாடில்லை யல்லவா?

**சத்துருக்கன்** — (என்னடா, இப் பையனது கெம்பீர வார்த்தை) பிள்ளாய்! இப்படிப் பட்ட குதிரைகள் நூறு கொடுப்பேன். இதை விட்டுவிடு.

**லவன்** — நூறல்ல; ஆயிரம் கொடுத்தாலும் இக் குதிரையை விடமாட்டேன்.

**சத்துருக்கன்** — (மனதில்) நாம் எவ்வளவு கேட்டுக் கொண்டாலும் இவன் கேட்கிறா

னில்லை; இவனது வீரந்தான் என்ன! இந்த வடிவமுள்ள பாலகன் மீது கணை களை ஏவ மனதும் வராது. (லவனைப் பார்த்து) எனது சொல்லை நன்கு ஆலோ சனை செய்து குதிரையை விட்டுவிடு.

லவன் — இல்லாதுபோனல்?

சத்துருக்கன் — (கோபத்துடன்) எனது கணை களுக்கு இரையாவாய்.

லவன் — என்னையா பயமுறுத்துகின்ருய்? உனக்கு நான் அஞ்சமாட்டேன். நீ வீர னய் இருந்தால் என்னேடு சண்டை செய் யச் சித்தமாயிரு.

சத்துருக்கன் — முட்டை வந்து குஞ்சை விரட் டுவதுபோல், நான் சாந்தமாயிருந்தா லும் உனது வார்த்தைகள் முற்றுகின் றனவே. குதிரையை விடமாட்டாயா?

லவன் — மும்மூர்த்திகள் வந்து கேட்டாலும் குதிரையை விடமாட்டேன்.

சத்துருக்கன் — சமாதானமாகக் கேட்டுக் கொள் ளுகிறேன், சண்டை வேண்டாம். குதி ரையை விட்டுவிடு.

லவன் — திறமை யில்லாதவர்களுடைய காரி யம் இதுதான்.

**சத்துருக்கன்** — உண்மையாகக் குதிரையை விடமாட்டாயா ?

**லவன்** — எவ்வளவு நேரஞ் சொல்வது, விட மாட்டேன், விடமாட்டேன், விடமாட் டேன் (என்று மூன்று முறைசொன்னான்.)

**சத்துருக்கன்** — அப்படியானல் வா. இப் பொழுதே உன்னைக் கொன்றுவிடுகிறேன்.

**லவன்** — அது பொய். வெற்றியும் தோல்வி யும் தெய்வாதீனம். அதோ அந்த விசால மான இடத்திற்கு வாரும். சண்டை செய்யலாம்.



## 27. ஜார்ஜ் ஸ்டீவின்ஸன்

### I

முற்காலத்தில் ஒரு ஊரிலிருந்து மற் றொரு ஊருக்குப் போவது மிகவும் கடினமா யிருந்தது. ஏனெனில் மக்கள் நடத்தற்குரிய நல்ல வழிகள் அக்காலங்களில் இல்லை. வழி யும் செவ்வையாக இராது. ஏழைகள் கால் நடையாகச் செல்வார்கள். அவ்வாறு செல்வதா யிருப்பினும் துணையின்றிச் செல்லமுடியாது. செல்வர்களும் குதிரை, பல்லக்கு முதலிய ஊர் திகளில் செல்வார்கள். வியாபாரிகளும் சரக்கு களைப் பொதிமாட்டு முதுகின்மீது போட்டுக் கொண்டு செல்வார்கள்.

இவ்வாறு செல்லும்போது இடையில் பெருங் காடுகள் குறுக்கிடும். சில சமயங்களில் கொடிய வன விலங்குகளால் பெருந் துன்பம் விளையும். இதல்லாமல் கள்வர் பயமும் இருக்கும். சில இடங்களில் உயிருக்கே ஆபத்தாய் முடியும். ஊருக்குப் புறப்பட்டவன் ஊர் போய்ச் சேரான்.

ஆனால் இக்காலத்திலோ அப்படிப்பட்ட துன்பங்களில்லை. எவ்வூருக்குப் போகவும் வரவும் எங்கும் நல்ல பாட்டைகள் உண்டு. மதுரையில் இருப்பவன் சென்னைக்குச் செல்லலாம். சென்னையிலிருப்பவன் பம்பாய்க்குச் செல்லலாம்.

பகலென்றும் இரவென்றும் பாராது பிரயாணம் செய்யலாம். உலக முழுவதும் சுற்றி வரலாம். விலங்குகளுக்கும் கள்வர்களுக்கும் அஞ்ச வேண்டுவதில்லை. இப்படிப்பட்ட நன்மைகளை யெல்லாம் நாம் அடையும்படி நமக்கு உதவியவர் ஜார்ஜ் ஸ்டீவின்ஸன்.

## II

ஜார்ஜ் ஸ்டீவின்ஸன் நியூகாசில் என்ற ஜில்லாவுக்கு அப்பாலுள்ள ஹீலம் என்னும் ஒரு சிறிய கிராமத்தில் பிறந்தவர். இவர் தந்தை இராபர்ட் ஸ்டீவின்ஸன் என்ற ஒரு

இடையர். இவரது தாயார் மேபெல். இவ ரது தாய்தந்தையர் சிறந்த உழைப்பாளிகள்.

இவருடன் பிறந்தவர்கள் ஐவர். இவருக் குச் சிறு வயதிலிருந்தே குடும்பப் பொருப்பு அதிகம். இவர் தமது தந்தைக்காக அவர் வேலை செய்யுமிடத்திற்கு உணவெடுத்துச் செல்வார். தந்தையாருக்கும் இவரிடத்தில் அதிகப் பிரியமுண்டு. ஜார்ஜூக்கு இளமை முதற்கொண்டே உபகாரச் சிந்தனை மிகுதியு முண்டு. பிற உயிர்கள் வருந்துவதைக் காணச் சகியார்.

இவரது பெற்றோர்கள் வருந்திப் பாடு பட்டும் மிகுந்த ஊதியம் இல்லை. உண்பதற் கும் போதுமான உணவு இல்லை. இதைக் கண்ட ஜார்ஜ் ஒரு விதவையிடம் சிற்றாளாக அமர்ந்தார். மாடுகளைத் தினமும் ஓட்டிக் கொண்டுபோய் மேய்த்து மாலை நேரத்தில் வீடுவந்து சேர்வார். பின்னர் தமது தந்தை யோடு சென்று உழவுத் தொழிலைக் கற்றார். அதன் பின்னர் நிலக்கரி பொறுக்கும் வேலை யில் அமர்ந்தார். இவரது பதினாறும் வய தில் இவரது தந்தையார் ஒரு நீராவி இயந் திரத்தில் வேலை செய்து வந்தார். அவருக்கு உதவியாளாக வேலை செய்து வந்தார். ஜார்ஜ் அவ்வாறு வேலை செய்து வருகையில் இயந்

திரங்களின் பல பாகங்களையும் செவ்வையாக உணர்ந்துகொண்டார். சில நாட்களில் அவ் வியந்திரங்களைப் பிரிக்கவும், அவற்றைச் சுத்தி செய்யவும் தெரிந்துகொண்டார்.

பிறகு பாதரட்சை பழுதுபார்க்கும் தொழிலையும் கற்றார். இன்னும் தனது முயற்சியினால் எழுதவும் படிக்கவும் தெரிந்துகொண்டார்.

இவர் தமது இருபத்தோராவது வயதில் பானி என்ற மாதை மணஞ் செய்து கொண்டார். பின் கப்பல் நிற்கும் துறைமுகத்திற்குச் சென்று கூலிவேலை செய்தார். இவரது கடிகாரம் ஒன்று கெட்டுப்போயிற்று. அதைப் பழுது பார்த்தார். இதை உணர்ந்த எல்லாரும் தங்கள் தங்கள் கடிகாரங்களை யெல்லாம் பழுது பார்க்கக் கொடுத்தார்கள். இதனால் இவருக்கு நல்லஊதியும் கிடைத்தது. இவருக்குக் கடிகார மருத்துவர் என்ற பெயரும் உண்டாயிற்று.

இதற்குப் பிற்பாடு இயந்திரம் ஓட்டும் தொழிலில் அமர்ந்தார். அப்பொழுது நீர் இறைக்கும் இயந்திரம் ஒன்று பழுதுபட்டது. இவர் அதனைப் பழுதுபார்த்தனர். அன்று முதல் இவர் இயந்திர மருத்துவர் ஆனார். பின் நூறு பவுன் சம்பளத்தில் இஞ்சினீராக நியமிக்கப் பெற்றார். சுரங்கங்களைச் சீர்திருத்தினார். இவர் இயந்திரத் தொழிற்சாலை

யொன்று ஏற்படுத்தினர். நாம் இப்பொழுது செல்லும் இருப்புப்பாதையை முதன் முதலில் கண்டுபிடித்தவர் இவர்தான். இருப்புப்பாதையின்மேல் ஓடும் இயந்திரம் செய்தவர் இவர் தான்.

இவ்வாறு இவ்வியந்திரம் ஓட ஆரம்பித்தபின் பற்பல இடங்களிலும் இருப்புப் பாதைபோட ஆரம்பித்தார்கள். சில ஆண்டுகளுக்கு முன்னே நமது இந்தியாவிலும் இருப்புப்பாதை போட்டனர். நாம் இப்போது இவ்விருப்புப் பாதை வழியாக நமது தேச முழுவதும் யாதொரு கஷ்டமுமின்றிச் சுற்றி வரலாம். நமக்கு வேண்டிய பொருள்களை எங்கும் மிக எளிதாகக் கொண்டு போகலாம் தபால்களும் இதன் வழியாகவே அதிசீக்கிரத்தில் கொண்டுபோகப்படுகின்றன.

பிள்ளைகளே! நீங்களும் இவரைப்போல விடாமுயற்சியுடன் உழைத்து சிறப்புறுவீர்களாக.



# 28. செய்யுள் பாடம்

## ஒளவையார் அருளிய

## வாக்குண்டாம்

நன்றி யொருவர்க்குச் செய்தக்கால் அந்நன்றி
என்று தருங்கொல் எனவேண்டா — நின்று
தளரா வளர்தெங்கு தாளுண்ட நீரைத்
தலையாலே தான் தருதலால். (1)

அட்டாலும் பால்சுவையில் குன்றா தளவல்ல
நட்டாலும் நண்பல்லார் — நண்பல்லர்
கெட்டாலும் மேன்மக்கள் மேன்மக்களே சங்கு
சுட்டாலும் வெண்மை தரும். (2)

அடுத்து முயன்றாலும் ஆகுநாள் அன்றி
எடுத்த கருமங்கள் ஆகா — தொடுத்த
உருவத்தால் நீண்ட உயர்மரங்கள் எல்லாம்
பருவத்தால் அன்றிப் பழா. (3)

உற்ற இடத்தில் உயிர்வழங்குந் தன்மையோர்
பற்றலரைக் கண்டால் பணிவரோ — கற்றூண்
பிளந்திறுவ தல்லாமல் பெரும்பாரம் தாங்கின்
தளர்ந்து வளையுமோ தான். (4)

நீரளவே யாகுமாம் நீராம்பல் தான்கற்ற
நூலளவே யாகுமாம் நுண்ணறிவு — மேலைத்
தவத்தளவே யாகுமாம் தான்பெற்ற செல்வம்
குலத்தளவே யாகும் குணம். (5)

நல்லாரைக் காண்பதுவும் நன்றே நலமிக்க
நல்லார்சொல் கேட்பதுவும் நன்றே — நல்லார்
குணங்கள் உரைப்பதுவும் நன்றே அவரோ
டிணங்கி இருப்பதுவும் நன்று (6)

நெல்லுக்கிறைத்தநீர் வாய்க்கால் வழியோடிப்
புல்லுக்கும் ஆங்கே பொசியுமாம் — தொல்லுலகில்
நல்லார் ஒருவர் உளரேல் அவர்பொருட்டு
எல்லார்க்கும் பெய்யும் மழை. (7)

பண்டு முளைப்ப தரிசியே யானாலும்
விண்டுமி போனால் முளையாதாம் — கொண்டபேர்
ஆற்றல் உடையார்க்கும் ஆகா தளவின்றி
ஏற்ற கருமம் செயல். (8)

மடல்பெரிது தாழை மகிழ்இனிது கந்தம்
உடல்சிறியர் என்றிருக்க வேண்டா — கடல்பெரிது
மண்ணீரும் ஆகா ததனருகே சிற்றூறல்
உண்ணீரும் ஆகி விடும். (9)

கவையாகிக் கொம்பாகிக் காட்டகத்தே நிற்கும்
அவையல்ல நல்ல மரங்கள் — சபைநடுவே
நீட்டோலை வாசியா நின்றான் குறிப்பறிய
மாட்டா தவன்நன் மரம். (10)

கானமயிலாடக் கண்டிருந்த வான்கோழி
தானு மதுவாகப் பாவித்துத் — தானுந்தன்
பொல்லாச் சிறகைவிரித் தாடினால் போலுமே
கல்லாதான் கற்ற கவி. (11)

வேங்கை வரிப்புலிநோய் தீர்த்தவிடகாரி
ஆங்கதனுக் காகாரம் ஆனல்போல் — பாங்கறியாப்
புல்லறி வாளர்க்குச் செய்த உபகாரம்
கல்லின்மேல் இட்ட கலம். (12)

அடக்கம் உடையார் அறிவிலரென் றெண்ணிக்
கடக்கக் கருதவும் வேண்டா—மடைத்தலையில்
ஓடுமீன் ஓட உறுமீன் வருமளவும்
வாடி யிருக்குமாம் கொக்கு. (13)

அற்ற குளத்தின் அருநீர்ப் பறவைபோல்
உற்றுழித் தீர்வார் உறவல்லர் — அக்குளத்தில்
கொட்டியும் ஆம்பலும் நெய்தலும் போலவே
ஒட்டி யுறுவார் உறவு. (14)

சீரியர் கெட்டாலுஞ் சீரியரே சீரியர்மற்
றல்லாதார் கெட்டாலங் கென்னாகும்—சீரிய
பொன்னின் குடமுடைந்தால் பொன்னாகும் என்னாகும்
மண்ணின் குடமுடைந்தக் கால். (15)

ஆழ அமுக்கி முகக்கினும் ஆழ்கடல்நீர்
நாழி முகவாது நானாழி—தோழி
நிதியும் கணவனும் நேர்படினும் தம்தம்
விதியின் பயனே பயன். (16)

உடன்பிறந்தார் சுற்றத்தார் என்றிருக்க வேண்டா
உடன்பிறந்தே கொல்லும் வியாதி—உடன்பிறவா
மாமலையில் உள்ளமருந்தே பிணிதீர்க்கும்
அம்மருந்து போல்வாரும் உண்டு. (17)

எழுதியவா றேமென் றிராமட நெஞ்சே!
கருதியவா றாமோ கருமம்—கருதிப்போய்க்
கற்பகத்தைச் சேர்ந்தார்க்குக் காஞ்சிரங்காய் ஈந்ததேன்
முற்பவத்தில் செய்த வினை. (18)

கற்பிளவோ டொப்பர் கயவர் கடுஞ்சினத்துப்
பொற்பிளவோ டொப்பாரும் போல்வாரே — வில்பிடித்து
நீர்கிழிய எய்த வடுப்போல மாறுமே
சீரொழுகு சான்றோர் சினம். (19)

நற்றா மரைக்கயத்தில் நல்லன்னஞ் சேர்ந்தாற்போல்
கற்றாரைக் கற்றாரே காமுறுவர்—கற்பிலா
மூர்க்கரை மூர்க்கர் முகப்பர் முதுகாட்டில்
காக்கை யுகக்கும் பிணம். (20)

நஞ்சுடைமை தானறிந்து நாகங் கரந்துறையும்
அஞ்சாப் புறங்கிடக்கும் நீர்ப்பாம்பு—நெஞ்சில்
கரவுடையோர் தம்மைக் கரப்பர் கரவார்
கரவிலா நெஞ்சத் தவர். (21)

மன்னனும் மாசறக் கற்றோனுஞ் சீர்தூக்கின்
மன்னனில் கற்றோன் சிறப்புடையன்—மன்னற்குத்
தன்தேசம் அல்லால் சிறப்பில்லை கற்றோர்க்குச்
சென்றவிடம் எல்லாம் சிறப்பு. (22)

கல்லாத மாந்தர்க்குக் கற்றுணர்ந்தார் சொல்கூற்றம்
அல்லாத மாந்தர்க் கறம்கூற்றம்—மெல்லிய
வாழைக்குத் தானீன்ற காய்கூற்றம் கூற்றமே
இல்லிற் கிசைந்தொழுகாப் பெண். (23)

சந்தன மென்குறடு தானதேய்ந்த காலத்தும்
கந்தம் குறைபடா தாதலால்—தநதம்
தனம்சிறியர் ஆயினும் தார்வேந்தர் கெட்டால்
மனம்சிறியர் ஆவரோ மற்று. (24)

மருவினிய சுற்றமும் வான்பொருளும் நல்ல
உருவும் உயர்குலமும் எல்லாம்—திருமடந்தை
ஆம்போ தவளோடும் ஆகும் அவள்பிரிந்து
போம்போ தவளோடும் போம். (25)

சாந்தனையும் தீயனவே செய்திடினும் தாம்அவரை
ஆந்தனையும் காப்பர் அறிவுடையோர்—மாந்தர்
குறைக்கும் தனையும் குளிர்நிழலைத் தந்து
மறைக்குமாம் கண்டீர் மரம். (26)

ஔவையார் அருளிய

# நல்வழி



சாதி யிரண்டொழிய வேறில்லை சாற்றுங்கால்
நீதி வழுவா நெறிமுறையின் — மேதினியில்
இட்டார் பெரியோர் இடாதார் இழிகுலத்தோர்
பட்டாங்கி லுள்ள படி. (1)

எண்ணி யொருகருமம் யார்க்குஞ்செய் யொண்ணாது
புண்ணியம் வந்தெய்து போதல்லால்—கண்ணில்லான்
மாங்காய் விழவெறிந்த மாத்திரைக்கோ லொக்குமே
ஆங்கால மாகு மவர்க்கு. (2)

வருந்தி யழைத்தாலும் வாராத வாரா [கி
பொருந்துவன போமினென்றாற் போகா—இருந்தேங்
நெஞ்சம்புண் ணாக நெடுந்தூரந் தானினைந்து
துஞ்சுவதே மாந்தர் தொழில். (3)

உள்ள தொழிய வொருவர்க் கொருவர்சுகம்
கொள்ளக் கிடையா குவலயத்தில் — வெள்ளக்
கடலோடி மீண்டு கரையேறி னாலென்
உடலோடு வாழு முயிர்க்கு. (4)

எல்லாப் படியாலும் எண்ணினால் இவ்வுடம்பு
பொல்லாப் புழுமலிநோய்ப் புன்குரம்பை — நல்லார்
அறிந்திருப்பார் ஆதலினால் ஆங்கமல நீர்போல்
பிரிந்திருப்பார் பேசார் பிறர்க்கு. (5)

ஆற்றுப் பெருக்கற் றடிசுடுமந் நாளுமவ்வா
றூற்றுப் பெருக்கால் உலகூட்டும் — ஏற்றவர்க்கு
நல்ல குடிப்பிறந்தார் நல்கூர்ந்தார் ஆனாலும்
இல்லையென மாட்டார் இசைந்து. (6)

ஆண்டாண்டு தோறும் அழுதுபுரண்டாலும்
மாண்டார் வருவரோ மாநிலத்தீர் — வேண்டா
நமக்கும் அதுவழியே நாம்போம் அளவும்
எமக்கென்னென் றிட்டுண் டிரும். (7)

ஒருநாள் உணவை யொழியென்றால் ஒழியாய்
இருநாளுக் கேலென்றால் ஏலாய் — ஒருநாளும்
என்னோ அறியாய் இடும்பைகூர் என்வயிறே
உன்னோடு வாழ்தல் அரிது. (8)

ஆற்றங் கரையின் மரமும் அரசறிய
வீற்றிருந்த வாழ்வும் விழுமன்றே — ஏற்றம்
உழுதுண்டு வாழ்வதற்கு ஒப்பில்லை கண்டீர்
பழுதுண்டு வேறோர் பணிக்கு. (9)

ஆவாரை யாரே அழிப்பார் அதுவன்றிச்
சாவாரை யாரே தவிர்ப்பவர் — ஓவாமல்
ஐயம் புகுவாரை யாரே விலக்குவார்
மெய்யம் புவியதன் மேல். (10)

பிச்சைக்கு மூத்த குடிவாழ்க்கை பேசுங்கால்
இச்சை பலசொல்லி இடித்துண்கை — சிச்சீ
வயிறு வளர்க்கைக்கு மானம் அழியா
துயிர்விடுகை சால வுறும். (11)

செய்தி வினையிருக்கத் தெய்வத்தை நொந்தக்கால்
எய்த வருமோ இருநிதியம் — வையத்
தறும்பாவம் என்னவறிந் தன்றிடார்க் கின்று
வெறும்பானை பொங்குமோ மேல். (12)

பெற்றார் பிறந்தார் பெருநாட்டார் பேருலகில்
உற்றார் உகந்தார் எனவேண்டார் — மற்றோர்
இரணம் கொடுத்தால் இடுவர் இடாரே
சரணம் கொடுத்தாலும் தாம். (13)

சேவித்தும் சென்றிரந்தும் தெண்ணீர்க் கடல்கடந்தும்
பாவித்தும் பாராண்டும் பாட்டிசைத்தும் — போவிப்பம்
பாழின்உடம்பை வயிற்றின் கொடுமையால்
நாழி யரிசிக்கே நாம். (14)

பாடுபட்டுத் தேடிப் பணத்தைப் புதைத்துவைத்துக்
கேடுகெட்ட மானிடரே கேளுங்கள் — கூடுவிட்டிங்
காவிதான் போயினபின் யாரே யனுபவிப்பார்
பாவிகாள் அந்தப் பணம் (15)

வேதாளஞ் சேருமே வெள்ளெருக்குப் பூக்குமே
பாதாள மூலி படருமே — மூதேவி
சென்றிருந்து வாழ்வளே சேடன் குடிபுகுமே
மன்றோரம் சொன்னார் மனை. (16)

ஆன் முதலில் அதிகம் செலவானால்
மானம் அழிந்து மதிகெட்டுப் — போனதிசை
எல்லார்க்கும் கள்ளனாய் எழ்பிறப்பும் தீயனாய்
நல்லார்க்கும் பொல்லனா நாடு. (17)

ஒன்றை நினைக்கின் அதுவொழிந்திட் டொன்றாகும்
அன்றி அதுவரினும் வந்தெய்தும் — ஒன்றை
நினையாத முன்வந்து நிற்பினும் நிற்கும்
எனையாளும் ஈசன் செயல். (18)

உண்பது நாழி உடுப்பது நான்குமுழம்
எண்பது கோடிநினைந் தெண்ணுவன — கண்புதைந்த
மாந்தர் குடிவாழ்க்கை மண்ணின் கலம்போலச்
சாந்துணையுஞ் சஞ்சலமே தான். (19)

ஆறிடு மேடும் மடுவும்போல் ஆஞ்செல்வம்
மாறிடும் ஏறிடும் மாநிலத்தீர் — சோறிடும்
தண்ணீரும் வாரும் தருமமே சார்பாக
உண்ணீர்மை வீறும் உயர்ந்து.

வெட்டெனவை மெத்தெனவை வெல்லாவாம் வேழத்தில்
பட்டுருவும் கோல்பஞ்சில் பாயாது — நெட்டிருப்புப்
பாரைக்கு நெக்குவிடாப் பாறை பசுமரத்தின்
வேருக்கு நெக்கு விடும். (21)

கல்லானே ஆனாலும் கைப்பொருளொன் றுண்டாயின்
எல்லாரும் சென்றங் கெதிர்கொள்வர் — இல்லானை
இல்லாளும் வேண்டாள்மற் றீன்றெடுத்த தாய்வேண்டாள்
செல்லா தவன்வாயில் சொல். (22)

பூவாதே காய்க்கும் மரமுமுள மக்களுளும்
ஏவாதே நின்றுணர்வார் தாமுளரே — தூவா
விரைத்தாலும் நன்றாகா வித்தெனவே பேதைக்
குரைத்தாலும் தோன்றா துணர்வு. (23)



Printed at the 'Caxton Press,' Madras — 1939. (C)

Caxton Press, Madras.